# الدعاء

## من الكتاب والسنة

## குர்ஆன் ஹதீஸ் கூறும்

# பிரார்த்தனை

அஷ்ஷைக் ஸயிது இப்னு அலி அல்கஹ்தானி

دار الهدى
DARUL HUDA

# பொருளடக்கம்

# பதிப்புரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! ஸலவாத்தும் ஸலாமும் முஹம்மத் (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது கிளையார்கள், தோழர்கள் மற்றும் நல்லோர் அனைவர் மீதும் உண்டாகட்டும்.

தாருல் ஹுதாவின் முப்பத்தி ஒன்றாவது நூலாக இதை வெளியிடுகிறோம். அல்ஹம்து லில்லாஹ். நமது இறைவன் அல்லாஹ் நம்மீது பேரன்புடையவன். நாம் அவனை வணங்குவதைக் கொண்டும் அவன் பக்கம் திரும்புவதைக் கொண்டும் அவனிடம் அவனது அருளையும் அன்பையும் கேட்டு மன்றாடுவதைக் கொண்டும் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறான். தனது அடியான்


DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com

தன்னிடம் யாசிப்பதைக் கொண்டு அவன் பெருமைப்படுகின்றான்.

நாம் எப்படி அல்லாஹ்விடம் பிரார்த்திக்கவேண்டும், எதையெல்லாம் அவனிடம் யாசிக்க வேண்டும் என்ற இரு கேள்விகளுக்கு பதில்தான் இந்த சிறிய ஏடு.

குர்ஆன் மற்றும் ஸஹீஹான ஹதீஸ்களில் வந்துள்ள துஆக்களை பிரார்த்தனைகளை தொகுத்து ஆசிரியர் கஹ்தானி அவர்கள் நமக்கு வழங்கியுள்ளார்கள். அல்லாஹ் அவர்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

இந்நூலில் உள்ள துஆக்களை தாங்களும் மனனம் செய்யுங்கள், உங்கள் பிள்ளைகள் குடும்பத்தார்கள் உறவினர்கள் மற்றும் முஸ்லிம்கள் அனைவருக்கும் கற்றுத் தாருங்கள். அல்லாஹ்விடம் அதிகமதிகம் கேளுங்கள். இந்நூல் தங்களுக்கு பயனுள்ளதாக இருந்தால்

அதற்காக எங்களுக்கு அல்லாஹ்விடம் அவனது மன்னிப்பையும் அன்பையும் கேளுங்கள்.

இந்நூலில் நீங்கள் காணும் நிறை, குறைகளை எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவான்.

இந்நூல் வெளிவர உதவி செய்த சகோதர சகோதரிகள் எல்லோருக்கும் அல்லாஹ் அருள் புரியட்டும். ஆமீன். அல்லாஹ்வே! எங்களை மன்னித்து எங்களிடமிருந்து இந்த செயலை ஏற்றுக்கொள். ஆமீன்.

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும். ஸலவாத்தும் ஸலாமும் நபியின் மீதும் அவர்களது உறவினர்கள் மீதும் உண்டாகட்டும்.!

**அ. உமர் ஷரீஃப்**

குர்ஆன் மற்றும் நபிமொழி பணியாளன்

தாருல் ஹுதா, சென்னை - 1

# தாருல் ஹுதா

## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமிய சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

*“நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர் களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்.” (அத்தவ்பா 9 : 71)*

*(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும் படி ஏவி, பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும்*

*இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள். (ஆலுஇம்ரான் 3 : 104)*

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதைத் தமது கரத்தால் மாற்றட்டும். அது இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன.

(ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியோர் முதல்

பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவையுள்ளவர்களாக இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபிமொழிகளுக்கிணங்க சமுதாயச் சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து, அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டது தான் "**தாருல் ஹுதா**'

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### *அழைத்தல்:*

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத்தூதர்கள் வாயிலாக நிலைநிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர்

முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும், சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே, இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் **தாருல் ஹுதா**வின் முதல் பணியாகும்.

## கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள், வாலிபர்கள், முதியவர்கள், ஆண்கள், பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத் தருவது **தாருல் ஹுதா**வின் இரண்டாவது பணியாகும்.

## நூல் வெளியிடுதல்:

மேன்மைமிகு குர்ஆன், சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களைத் தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து, அந்நூல்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது **தாருல் ஹுதா**வின் மூன்றாவது பணியாகும்.

## உதவுதல்:

அல்லாஹு தஆலாவே அனைவரின் தேவைகள், துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப் பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை, எளியோர், நலிந்தோர் ஆகியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில்

பங்கெடுப்பது, பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவது முஸ்லிம்களுடைய அடிப்படைப் பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக **பைத்துல்மால்** (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்கச் சிந்தையும், மார்க்கப்பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான, உபரியான தர்மங்களைப் பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் **தாருல் ஹுதா**வின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி, இஸ்லாம் முழுமையாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காகவும், மனித சமுதாயங்களுக்குள் நல்லுறவும், அன்பும், கருணையும், சமூகப் புரிந்துணர்வும் ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காகத் தொண்டாற்ற வேண்டும் என்பது **தாருல் ஹுதா**வின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும், தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்ற வரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

*“நீங்கள் உங்கள் ஆன்மாக்களுக்காக நன்மையில் எதை முற்படுத்திக் கொள்கிறீர்களோ, அதைத்தான் அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்ததாகவும், மகத்தான கூலியாகவும் பெற்றுக் கொள்வீர்கள்.” (அல்முஸ்ஸம்மில் 73 : 20)*

அவனிடமே உதவி தேடுகிறோம்! அவனையே முன்னோக்கி நிற்கிறோம்!

# முன்னுரை

அளவற்ற அருளாளன் அன்புடையோன்
அல்லாஹ்வின் பெயரால்...

நிச்சயமாக எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனையே நாம் புகழ்கிறோம். அவனிடமே உதவி தேடுகிறோம். அவனிடமே மன்னிப்பைக் கேட்கிறோம். நம்முடைய நஃப்ஸின் தீங்குகளை விட்டும் நமது கெட்ட செயல்களை விட்டும் அல்லாஹ்வைக் கொண்டே பாதுகாப்புத் தேடுகிறோம்.

யாருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுகிறானோ அவரை வழிகெடுப்பவர் யாருமில்லை. யாரை அல்லாஹ் வழிகேட்டில் விட்டுவிட்டானோ அவருக்கு நேர்வழி காட்டுபவர் யாருமில்லை.

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்.

அவனுக்கு இணைதுணை இல்லை என்று நான் சாட்சி சொல்கிறேன். நிச்சயமாக முஹம்மது ﷺ அவனுடைய அடிமையும் அவனுடைய தூதரும் ஆவார் என்றும் சாட்சி சொல்கிறேன். அல்லாஹ் அவனுடைய தூதர் மீதும் அவருடைய குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வானாக!

இந்நூலில் துஆக்களின் (பிரார்த்தனை) தொகுப்பை சுருக்கமாக கோர்வை செய்திருக்கிறேன். மேலும் அது குறித்து பல பயனுள்ள விசயங்களையும் இணைத்துள்ளேன். அல்லாஹ்வின் அழகிய பெயர்களைக் கொண்டும் உயர்ந்த பண்புகளைக் கொண்டும் அவனிடம் உதவி கேட்கிறேன். இதை அவனது சங்கைமிக்க முகத்திற்காக செய்யப்பட்ட அமலாக ஆக்கி அருள்வானாக! அவன் அதற்கு நிச்சயமாக தகுதி உள்ளவனும் ஆற்றல் பெற்றவனும் ஆவான்.

அல்லாஹ் அவனுடைய தூதர் மீதும் அவனுடைய குடும்பத்தார் தோழர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் சொல்வானாக!

ஆசிரியர்
**அஷ்ஷைய்க்**
**ஸயீது இப்னு அலி அல்கஹ்தானி**
ஷஅபான் 1408

# துஆவின் சிறப்புகள்

உங்கள் இறைவன் கூறுகிறான்:

"நீங்கள் (உங்களுக்கு வேண்டியவை அனைத்தையும்) என்னிடமே கேளுங்கள். நான் உங்கள் பிரார்த்தனையை அங்கீகரித்துக் கொள்வேன். எவர்கள் என்னை வணங்காது பெருமையடிக்கின்றாரோ, அவர்கள் நிச்சயமாக சிறுமைப்பட்டவர்களாக நரகம் புகுவார்கள். (அல்குர்ஆன் 40 : 60)

(நபியே!) உம்மிடம் என் அடியார்கள் என்னைப் பற்றிக் கேட்டால் (அதற்கு நீர் கூறுவீராக:) "நிச்சயமாக நான் உங்களுக்கு சமீபமானவன். (எவரும்) என்னை அழைத்தால் அந்த அழைப்பாளரின் அழைப்புக்கு விடையளிப்பேன்." ஆதலால், அவர்கள் என்னிடமே பிரார்த்தனை செய்யவும்; என்னையே நம்பிக்கை கொள்ளவும். (அதனால்) அவர்கள் நேர்வழி அடைவார்கள். (அல்குர்ஆன் 2 : 186)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “துஆதான் வணக்கமாகும்.” உங்களது இறைவன் கூறுகின்றான்: “என்னை அழையுங்கள்; நான் உங்களுக்கு பதில் தருகிறேன்.”

(ஸுனன் அபூதாவூது, ஸுனன் திர்மிதி)

இன்னும், நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களது இறைவன் மிக வெட்கமுள்ளவன், சங்கை மிக்கவன் தனது அடியான் இரு கரங்களையும் தன் பக்கம் உயர்த்தி பிரார்த்தனை செய்யும்போது அவனது கைகளை காலியாக திருப்புவதைக் கண்டு அவன் வெட்கமடைகிறான்.

(ஸஹீஹுல் ஜாமிஃவு ஸகீர்)

மேலும், கூறினார்கள்: பாவம் அல்லது உறவை முறிப்பது இவை இன்றி ஒரு முஸ்லிம் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தால் அல்லாஹ் மூன்றில் ஒன்றை நிச்சயமாக அவருக்கு வழங்குவான். ஒன்று அவனது அழைப்பு உடனடியாக ஏற்றுக் கொள்ளப்படும்

அல்லது மறுமையில் அவருக்கு நன்மை வழங்கப்படும். அல்லது அவர் கேட்ட நன்மைக்கு சமமாகவுள்ள தீங்கை அல்லாஹ் அகற்றி விடுவான்.

இதைக் கேட்ட தோழர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அப்படியானால் நாங்கள் அதிகமதிகம் துஆ கேட்டுக் கொள்கிறோம் எனக் கூறினார்கள். அதற்கு நபியவர்கள் கூறினார்கள், அல்லாஹ் அதைவிட அதிகமதிகம் வழங்கக்கூடியவன்.

(ஸஹீஹுத் திர்மிதி)

# துஆவின் ஒழுக்கங்கள் துஆ ஏற்கப்படுவதற்கான காரணங்கள்

1. அல்இக்லாஸ் (மனத்தூய்மை) –அல்லாஹ்வின் திருப்தியையும் பொருத்தத்தையும் மட்டும் நாடவேண்டும்.

2. துஆவின் ஆரம்பத்திலும் இறுதியிலும் அல்லாஹ்வைப் புகழவேண்டும். நபியின் மீது ஸலவாத்தும் கூறவேண்டும்.

3. உறுதியான வாசகங்களைக் கொண்டு துஆ கேட்கவேண்டும். அது அங்கீகரிக்கப்படும் என்றும் நம்பிக்கை வைக்கவேண்டும்.

4. தொடர்ந்து கெஞ்சிக் கேட்கவேண்டும். அவசரப்படக் கூடாது.

5. துஆவில் மன ஓர்மை இருக்கவேண்டும்.

6. சுகம், துக்கம், வசதி, நெருக்கடி என எல்லா நிலைமைகளிலும் துஆ கேட்கவேண்டும்.

7. அல்லாஹ்விடம் மட்டுமே கேட்க வேண்டும்.

8. உறவினர், செல்வம், பிள்ளைகளுக்கு எதிராகவும் தனக்கு எதிராகவும் துஆ கேட்கக் கூடாது.

9. துஆ கேட்கும்போது மிகவும் தாழ்ந்த குரலுமின்றி, உரத்த சப்தமுமின்றி நடுத்தரத்தில் கேட்கவேண்டும்.

10. தன் பாவங்களையும் குற்றங்களையும் ஒப்புக் கொண்டு அதற்காக மன்னிப்புக் கேட்கவேண்டும். அல்லாஹ்வின் அருட்கொடைகளை ஏற்றுக் கொண்டு அவற்றிற்கு நன்றி செலுத்தவேண்டும்.

11. துஆ கேட்கும்போது வாசகக் கோர்வைக்காக சிரமம் எடுத்துக் கொள்ளக்கூடாது.

12. துஆவில் பணிவு, பயம், நடுக்கம், ஆர்வம் ஆகியவை இருக்கவேண்டும்.

13. உரிமைகளை உரியவர்களிடம் ஒப்படைத்து விட வேண்டும்.

14. ஒவ்வொன்றையும் மும்மூன்று முறை கேட்க வேண்டும்.

15. கிப்லாவை முன்னோக்க வேண்டும்.

16. கைகளை உயர்த்திக் கேட்கவேண்டும்.

17. முடிந்தால் துஆ கேட்பதற்கு முன் உளூ செய்து கொள்ளவேண்டும்.

18. துஆ கேட்பதில் எல்லை மீறக்கூடாது.

19. பிறருக்கு துஆ செய்யும்போது முதலில் தனக்கு செய்து கொள்ளவேண்டும். (ஆனால் இது கட்டாயமல்ல)

20. அல்லாஹ்விடம் வஸீலா தேடவேண்டும். அதாவது, அவனது அழகிய பெயர்கள் மற்றும் பண்புகளைக் கொண்டு அவனைப் புகழ்ந்து கேட்பது; அல்லது தான் செய்த ஒரு நற்செயலைக் கூறிக் கேட்பது; அல்லது தனக்கருகில் உயிர் வாழும் நல்லவர் ஒருவர் தமக்காக கேட்ட

துஆவைக் கூறிக் கேட்பது. உதாரணமாக "அல்லாஹ்வே! இன்னவர் எனக்காக உன்னிடம் துஆ கேட்ட துஆவை என் விஷயத்தில் ஏற்றுக்கொள்! என்று கேட்பது.

21. உணவு, குடிப்பு, ஆடை ஹலாலாக இருக்க வேண்டும்.

22. துஆவில் பாவமான காரியத்தையோ உறவை முறிக்கும் விஷயத்தையோ கேட்கக் கூடாது.

23. துஆ கேட்பவர் நன்மையை ஏவுபவராகவும் தீமையைத் தடுப்பவராகவும் இருக்க வேண்டும்.

24. எல்லாப் பாவங்களை விட்டும் விலகியிருக்க வேண்டும்.

# துஆ ஏற்றுக் கொள்ளப்படும் நேரங்கள், நிலைமைகள் மற்றும் இடங்கள்.

1. லைலத்துல் கத்ர்

2. இரவின் மூன்றாம் பகுதி.

3. கடமையான தொழுகைகளுக்குப் பின்.

4. அதான் - இகாமத்திற்கிடையில்.

5. ஒவ்வொரு இரவிலும் ஒரு குறிப்பிட்ட நேரம்.

6. பாங்கு சொல்லப்படும் போது.

7. மழை இறங்கும்போது.

8. அல்லாஹ்வின் பாதையில் வீரர்கள் போரைத் துவங்கும்போது.

9. வெள்ளிக்கிழமையில் ஒரு நேரம் (அந்த நேரம் மாலை நேரங்களின் இறுதி நேரமாகும். என்று பெரும்பாலான அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

சிலர், குத்பா மற்றும் ஜுமுஆத் தொழுகையுடைய நேரமென்றும் கூறுகிறார்கள்.)

10. உண்மையான எண்ணத்துடன் ஜம்ஜம் நீரைக் குடிக்கும்போது.

11. ஸஜ்தாவில் இருக்கும்போது

12. இரவில் தூக்கத்தை விட்டு எழும்போது, அப்போது ஹதீஸில் கற்றுக் கொடுக்கப்பட்டுள்ள துஆவைக் கேட்க வேண்டும்.

13. உளூ செய்து தூங்குகிற நிலையில் இடையில் ஏற்படும் விழிப்பின் போது.

14. லாயிலாஹ இல்லா அன்த்த ஸுப்ஹானக்க இன்னீ குன்து மினள் ளாளிமீன் - “உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறொருவனும் இல்லை. நீ மிகப் பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன்” என்று ஓதுவது. (அல்குர்ஆன் 21 : 87)

15. மவுத்து (இறப்புச்) செய்திக்குப் பின் கேட்கும் துஆ.

16. தொழுகையின் கடைசி இருப்பில் அத்தஹிய்யாத், ஸலவாத் ஓதியதற்குப் பின் கேட்கும் துஆ.

17. அல்லாஹ்வின் மகத்துவமிக்க பெயரைக் கூறி துஆ கேட்கும்போது அந்த மகிமை மிக்க பெயரைக் கூறி அவனை அழைக்கும்போது அவன் அதற்குப் பதில் தருகிறான். அவனிடம் யாசிக்கும்போது அதை அவன் கொடுக்கின்றான்.

18. ஒரு முஸ்லிம் தனது முஸ்லிமான சகோதரருக்காக மறைவில் கேட்கும்போது

19. அரஃபா அன்று அரஃபா மைதானத்தில் கேட்கும்போது

20. ரமழான் மாதத்தில் கேட்கும்போது

21. திக்ர் மற்றும் உபதேச சபைகளில் முஸ்லிம்கள் ஒன்றுகூடியிருக்கும்போது.

22. சோதனையான சமயங்களில் “இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்” “அல்லாஹும்ம ஃஜுர்னீ ஃபீ முஸிபத்தீ வ அக்லிஃப்லீ கைரன் மின்ஹா” (நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்விற்கே சொந்தமானவர்கள்; அவன் பக்கமே நாங்கள் திரும்புகிறோம்; அல்லாஹ்வே... என் சோதனையில் எனக்கு நற்கூலி வழங்கு! எனக்குச் சிறந்ததைப் பகரமாகத் தந்துவிடு! என்று பிரார்த்திக்கும் போது. (முஸ்லிம்)

23. உள்ளத்தில் அல்லாஹ்வின் தேட்டம் அதிகமாகி முழுமையாக மனத்தூய்மை ஏற்படும்போது.

24. அநீதியிழைக்கப்பட்டவர் தமக்கு அநீதி இழைத்தவருக்கு எதிராக கேட்கும்போது.

25. தந்தை தனது மகனுக்குச் சாதகமாக அல்லது பாதகமாக கேட்கும் போது.

26. நோன்பு வைத்திருக்கும் போது நோன்பு திறக்கும் வரை

27. நோன்பாளி நோன்பு திறக்கும் வரை

28. நெருக்கடியான நிலையில் சிக்கிக் கொள்ளும் போது

29. நீதமான அரசர் கேட்கும்போது

30. பயணத்தில் இருப்பவர் கேட்கும்போது

31. பெற்றோருக்கு உபகாரம் செய்யும் பிள்ளைகள் கேட்கும்போது.

32. உளு செய்ததற்குப் பின்பு, ஹதீஸில் கூறப்பட்ட துஆவைக் கேட்கும்போது

33. ஹஜ்ஜில் சிறிய ஜம்ராவில் கல்லெறிந்தப் பின்.

34. ஹஜ்ஜில் நடு ஜம்ராவில் கல்லெறிந்தப் பின்

35. கஅபாவிற்குள் கேட்கும்போது (தற்போது கஅபா கட்டிடத்திற்கு வெளியில் வளைவாக கட்டப்பட்டுள்ள அரை மதில் சுவருக்குள் தொழுவதும், துஆ கேட்பதும், கஅபாவிற்குள் தொழுவதும் துஆ கேட்பது போலாகும்.)

36. ஸஃபா மலையில்

37. மர்வா மலையில்

38. முஸ்தலிஃபாவில்

39. முஃமின் - அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டவர், எங்கிருந்தாலும் எல்லா நிலைமைகளிலும் அல்லாஹ்வையே பிரார்த்தித்தவராக இருக்கவேண்டும்.

(நபியே!) உம்மிடம் என் அடியார்கள் என்னைப் பற்றிக் கேட்டால் (அதற்கு நீர் கூறுவீராக:) "நிச்சயமாக நான் உங்களுக்கு சமீபமானவன். (எவரும்) என்னை அழைத்தால் அந்த அழைப்பாளரின் அழைப்புக்கு விடையளிப்பேன்." ஆதலால், அவர்கள் என்னிடமே பிரார்த்தனை செய்யவும்; என்னையே நம்பிக்கை கொள்ளவும். (அதனால்) அவர்கள் நேர்வழி அடைவார்கள். (அல்குர்ஆன் 2 : 186)

நாம் இதுவரை குறிப்பிட்ட நேரங்கள் நிலைமைகள் இடங்கள் சற்று கூடுதல் முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருப்பதால் அவற்றை இங்கே சிறப்பித்துக் கூறியுள்ளோம்.



# அல்குர்ஆன் துஆக்கள்

رَبَّنَا ظَلَمْنَآ اَنْفُسَنَا سكتة وَاِنْ لَّمْ تَغْفِرْلَنَا
وَتَرْحَمْنَا لَنَكُوْنَنَّ مِنَ الْخٰسِرِيْنَ ﴿٢٣﴾

1. “எங்கள் இறைவனே! எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம். நீ எங்களை மன்னித்து எங்களுக்கு அருள் புரியாவிட்டால் நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களாகி விடுவோம்” (அல்குர்ஆன் 7 : 23)

رَبِّ اِنِّيْٓ اَعُوْذُبِكَ اَنْ اَسْـَٔلَكَ مَا لَيْسَ لِيْ
بِهٖ عِلْمٌ ؕ وَاِلَّا تَغْفِرْلِيْ وَتَرْحَمْنِيْٓ
اَكُنْ مِّنَ الْخٰسِرِيْنَ ﴿٤٧﴾

2. (நூஹ் நபி) “என் இறைவனே! நான் அறியாத விஷயங்களைப் பற்றி (இனி) உன்னிடம் கேட்காது என்னை பாதுகாக்குமாறு உன்னிடம் நிச்சயமாக

நான் பிரார்த்திக்கிறேன். நீ என்னை மன்னித்து எனக்கு நீ கிருபை செய்யாவிட்டால் நிச்சயமாக நானும் நஷ்டமடைந்தவர்களில் ஆகிவிடுவேன்."

(அல்குர்ஆன் 11 : 47)

رَبِّ اغْفِرْلِیْ وَلِوَالِدَیَّ وَلِمَنْ دَخَلَ بَیْتِیَ مُؤْمِنًا وَّلِلْمُؤْمِنِیْنَ وَ الْمُؤْمِنٰتِ ؕ

3. என் இறைவனே! எனக்கும் என்னுடைய தாய் தந்தைக்கும் நம்பிக்கை கொண்டவராக என்னுடைய வீட்டில் நுழைந்தவருக்கும் (வீட்டில் நுழையாத மற்ற) நம்பிக்கை கொண்ட ஆண்களுக்கும் நம்பிக்கை கொண்ட பெண்களுக்கும் நீ மன்னிப்பை வழங்கு!

(அல்குர்ஆன் 71 : 28)

رَبَّنَا تَقَبَّلْ مِنَّا ؕ اِنَّكَ اَنْتَ السَّمِیْعُ الْعَلِیْمُ ﴿۱۲۷﴾

4. "எங்கள் இறைவனே! (உனக்காக நாங்கள் செய்த அமல்களை) எங்களிடமிருந்து ஏற்றுக்

கொள்வாயாக! நிச்சயமாக நீதான் (எங்கள் பிரார்த்தனையை) நன்கு செவியுறுபவன், நன்கு அறிந்தவன். (அல்குர்ஆன் 2 : 127)

وَتُبْ عَلَيْنَا ۚ إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الرَّحِيمُ ﴿١٢٨﴾

5. எங்களை நீ மன்னிப்பாயாக! நிச்சயமாக நீதான் மிக மன்னிப்பவன், மிக்க கருணையுடையவன். (அல்குர்ஆன் 2 : 128)

رَبِّ اجْعَلْنِي مُقِيمَ الصَّلَاةِ وَمِنْ ذُرِّيَّتِي ۚ رَبَّنَا وَتَقَبَّلْ دُعَاءِ ﴿٤٠﴾

6. என் இறைவனே! என்னையும், என் சந்ததி களையும் (உன்னைத்) தொழுது வருபவர்களாக ஆக்கி வை. எங்கள் இறைவனே! மேலும் என்னுடைய பிரார்த்தனையை அங்கீகரித்துக் கொள்! (அல்குர்ஆன் 14 : 40)

رَبَّنَا اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ


DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com

يَوْمَ يَقُوْمُ الْحِسَابُ ﴿٤١﴾

7. எங்கள் இறைவனே! எனக்கும், என் தாய் தந்தைக்கும், மற்ற நம்பிக்கையாளர்களுக்கும் கேள்வி கணக்கு நிறைவேறுகின்ற (மறுமை) நாளில் மன்னிப்பளிப்பாயாக!"

(அல்குர்ஆன் 14 : 41)

رَبِّ هَبْ لِيْ حُكْمًا وَّاَلْحِقْنِيْ بِالصّٰلِحِيْنَ ﴿٨٣﴾

وَاجْعَلْ لِّيْ لِسَانَ صِدْقٍ فِي الْاٰخِرِيْنَ ﴿٨٤﴾

وَاجْعَلْنِيْ مِنْ وَّرَثَةِ جَنَّةِ النَّعِيْمِ ﴿٨٥﴾

وَلَا تُخْزِنِيْ يَوْمَ يُبْعَثُوْنَ ﴿٨٧﴾

8. என் இறைவனே! நீ எனக்கு ஞானத்தை அருள் புரிந்து, நல்லவர்களுடன் என்னைச் சேர்த்து விடுவாயாக! பிற்காலத்தில் வருகின்ற மக்களிடம் எனக்கு நற்பெயரை தந்தருள்வாயாக! இன்ப சுகத்தையுடைய சொர்க்கத்தின் வாரிசுகளிலும்

என்னை நீ ஆக்கிவைப்பாயாக! (உயிர் கொடுத்து) எழுப்பப்படும் (மறுமை) நாளில் நீ என்னை இழிவுக்குள்ளாக்காதே!

(அல்குர்ஆன் 26 : 83,84,85,87)

رَبِّ هَبْ لِىْ مِنَ الصّٰلِحِيْنَ ۝١٠٠

9. என் இறைவனே! நல்லோர்களில் (ஒருவரை) நீ எனக்கு(ச் சந்ததியாக) வழங்கு!

(அல்குர்ஆன் 37 : 100)

رَبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَاِلَيْكَ اَنَبْنَا وَاِلَيْكَ الْمَصِيْرُ ۝٤

10. எங்கள் இறைவனே! உன்னையே நாங்கள் நம்பினோம். உன் பக்கமே நாங்கள் திரும்பி விட்டோம். உன்னிடமே (நாங்கள் அனைவரும்) வரவேண்டியதிருக்கிறது. (அல்குர்ஆன் 60 : 4)

رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِّلَّذِيْنَ كَفَرُوْا
وَاغْفِرْ لَنَا رَبَّنَا ۚ اِنَّكَ اَنْتَ الْعَزِيْزُ الْحَكِيْمُ ۝٥

11. எங்கள் இறைவனே! எங்களை நீ நிராகரிப்பவர்களின் துன்பத்திற்குள்ளாக்கி விடாதே! எங்களை நீ மன்னிப்பாயாக! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீதான் (அனைவரையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனும் ஆவாய்."

(அல்குர்ஆன் 60 : 5)

رَبِّ اَوْزِعْنِیْۤ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِیْۤ اَنْعَمْتَ عَلَیَّ وَ عَلٰی وَالِدَیَّ وَ اَنْ اَعْمَلَ صَالِحًا تَرْضٰىهُ وَاَدْخِلْنِیْ بِرَحْمَتِكَ فِیْ عِبَادِكَ الصّٰلِحِیْنَ۝۱۹

12. என் இறைவனே! நீ என் மீதும் என் தாய் தந்தை மீதும் புரிந்த உன்னுடைய அருள்களுக்கு உனக்கு நான் நன்றி செலுத்த நீ அருள் புரி. உனக்கு திருப்தி அளிக்கக்கூடிய நற்செயல்களையும் நான் செய்ய(க்கூடிய பாக்கியத்தை எனக்கு) அருள் புரிந்து, உன்னுடைய கிருபையைக் கொண்டு

உன்னுடைய நல்லடியார்களுடனும் என்னை சேர்த்து வை! (அல்குர்ஆன் 27 : 19)

رَبِّ هَبْ لِيْ مِنْ لَّدُنْكَ ذُرِّيَّةً طَيِّبَةً ۚ
اِنَّكَ سَمِيْعُ الدُّعَآءِ ﴿٣٨﴾

13. என் இறைவனே! உன் புறத்திலிருந்து எனக்கு நல்ல சந்ததியை அளித்திடு! நிச்சயமாக நீ பிரார்த்தனைகளை செவியேற்பவனாக இருக்கின்றாய்! (அல்குர்ஆன் 3 : 38)

رَبِّ لَا تَذَرْنِيْ فَرْدًا وَّاَنْتَ خَيْرُ الْوٰرِثِيْنَ ۚ ﴿٨٩﴾

14. என் இறைவனே! நீ என்னை(ச் சந்ததியற்ற) தனித்தவனாக ஆக்கி விடாதே! நீயோ வாரிசுதாரர்களில் மிக்க மேலானவன். (அல்குர்ஆன் 21 : 89)

لَآ اِلٰهَ اِلَّآ اَنْتَ سُبْحٰنَكَ ۖ اِنِّيْ كُنْتُ مِنَ الظّٰلِمِيْنَ ۚ ﴿٨٧﴾

15. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன்

வேறு எவரும் இல்லை. நீ மிகப்பரிசுத்தமானவன். நிச்சயமாக நானோ அநியாயக்காரர்களில் ஒருவனாகி விட்டேன். (என்னை மன்னித்து அருள்புரி!) (அல்குர்ஆன் 21 : 87)

رَبِّ اشْرَحْ لِيْ صَدْرِيْ ﴿٢٥﴾ وَيَسِّرْ لِيْٓ اَمْرِيْ ﴿٢٦﴾
وَاحْلُلْ عُقْدَةً مِّنْ لِّسَانِيْ ﴿٢٧﴾ يَفْقَهُوْا قَوْلِيْ ﴿٢٨﴾

16. என் இறைவனே! என் உள்ளத்தை(த் திடப் படுத்தி) விரிவாக்கு! (நான் செய்ய வேண்டிய) என் காரியங்களை எனக்குச் சுலபமாக்கி வை! என் நாவிலுள்ள (கொண்ணல்) முடிச்சை அவிழ்த்து விடு! என் வார்த்தையை (மக்கள்) விளங்கிக் கொள்வார்கள். (அல்குர்ஆன் 20 : 25-28)

رَبِّ اِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ فَاغْفِرْ لِيْ

17. என் இறைவனே! நிச்சயமாக நான் எனக்கே தீங்கிழைத்துக் கொண்டேன். நீ எனக்கு மன்னிப்பு வழங்கு! (அல்குர்ஆன் 28 : 16)

رَبَّنَآ اٰمَنَّا بِمَآ اَنْزَلْتَ وَاتَّبَعْنَا الرَّسُوْلَ فَاكْتُبْنَا مَعَ الشّٰهِدِيْنَ ﴿٥٣﴾

18. எங்கள் இறைவனே! நீ இறக்கியதை நாங்கள் நம்புகிறோம். (உன்னுடைய) இத்தூதரையும் நாங்கள் பின்பற்றி நடக்கின்றோம். ஆதலால், (அவரை) உண்மைப்படுத்தியவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்துகொள்!

(அல்குர்ஆன் 3 : 53)

رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِّلْقَوْمِ الظّٰلِمِيْنَ ﴿٨٥﴾ وَنَجِّنَا بِرَحْمَتِكَ مِنَ الْقَوْمِ الْكٰفِرِيْنَ ﴿٨٦﴾

19. எங்கள் இறைவனே! நீ எங்களை அநியாயம் செய்யும் மக்களின் துன்புறுத்தலுக்கு உள்ளாக்கி விடாதே! எங்கள் இறைவனே! நிராகரிக்கும் மக்களிடமிருந்து உன் அருளைக் கொண்டு நீ எங்களைப் பாதுகாத்துக் கொள்!

(அல்குர்ஆன் 10 : 85, 86)

رَبَّنَا اغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَإِسْرَافَنَا
فِي أَمْرِنَا وَثَبِّتْ أَقْدَامَنَا وَانْصُرْنَا
عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ ﴿١٤٧﴾

20. எங்கள் இறைவனே! எங்கள் பாவங்களை நீ மன்னிப்பாயாக! எங்கள் செயல்களில் நாங்கள் வரம்புமீறிய (குற்றத்)தையும் மன்னிப்பாயாக! எங்கள் பாதங்களை (போரில் நழுவாது) நீ உறுதிபடுத்தியும் வைப்பாயாக! (உன்னை) நிராகரிக்கும் மக்களை வெற்றிபெற நீ எங்களுக்கு உதவி புரிவாயாக! (அல்குர்ஆன் 3 : 147)

رَبَّنَا آتِنَا مِنْ لَدُنْكَ رَحْمَةً وَهَيِّئْ لَنَا
مِنْ أَمْرِنَا رَشَدًا ﴿١٠﴾

21. எங்கள் இறைவனே! உன் அருளை எங்களுக்கு அளித்திடு! நீ எங்களுக்கு நேரான வழியை சுலபமாக்கி விடு! (அல்குர்ஆன் 18 : 10)

رَبِّ زِدْنِيْ عِلْمًا ﴿١١٤﴾

22. என் இறைவனே! என்னுடைய கல்வி ஞானத்தை மென்மேலும் அதிகப்படுத்து!

(அல்குர்ஆன் 20 : 114)

رَبِّ اَعُوْذُ بِكَ مِنْ هَمَزٰتِ الشَّيٰطِيْنِ ﴿٩٧﴾
وَاَعُوْذُ بِكَ رَبِّ اَنْ يَّحْضُرُوْنِ ﴿٩٨﴾

23. என் இறைவனே! (பாவமான காரியங்களைச் செய்யும்படித் தூண்டும்) ஷைத்தான்களுடைய தூண்டுதல்களை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். மேலும் என் இறைவனே! ஷைத்தான்கள் என்னிடம் வருவதை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்.

(அல்குர்ஆன் 23 : 97, 98)

رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَاَنْتَ خَيْرُ الرّٰحِمِيْنَ ﴿١١٨﴾

24. என் இறைவனே! நீ (என்னை) மன்னித்து

விடு! (எனக்கு) கிருபை செய்! கிருபை செய்பவர்களிலெல்லாம் நீதான் மிக்க மேலானவன். (அல்குர்ஆன் 23 : 118)

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنۡيَا حَسَنَةً وَّفِى الۡاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ ﴿٢٠١﴾

25. எங்கள் இறைவனே! எங்களுக்கு நீ இம்மையிலும் அழகியதைத் தா! மறுமையிலும் அழகியதைத் தா! நரக நெருப்பின் வேதனையை விட்டு எங்களை நீ பாதுகாத்துக் கொள்!

(அல்குர்ஆன் 2 : 201)

سَمِعۡنَا وَاَطَعۡنَا غُفۡرَانَكَ رَبَّنَا وَاِلَيۡكَ الۡمَصِيۡرُ ﴿٢٨٥﴾

26. (எங்கள் இறைவனே! உன் வசனங்களை) நாங்கள் செவியுற்றோம். (உன் கட்டளைகளுக்கு) நாங்கள் கட்டுப்பட்டோம். நாங்கள் உனது

மன்னிப்பைக் கோருகிறோம். எங்கள் இறைவனே! உன்னிடமேதான் நாங்கள் சேர வேண்டியதிருக்கிறது. (அல்குர்ஆன் 2 : 285)

رَبَّنَا لَا تُؤَاخِذْنَآ اِنْ نَّسِيْنَآ اَوْ اَخْطَاْنَا ۚ
رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَآ اِصْرًا كَمَا حَمَلْتَهٗ عَلَى
الَّذِيْنَ مِنْ قَبْلِنَا ۚ رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ
لَنَا بِهٖ ۚ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا اَنْتَ
مَوْلٰىنَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكٰفِرِيْنَ ﴿٢٨٦﴾

27. எங்கள் இறைவனே! நாங்கள் (எங்கள் கடமைகளைச் செய்ய) மறந்து விட்டாலும் அல்லது அதில் தவறிழைத்து விட்டாலும் அதைப் பற்றி நீ எங்களை (குற்றம்) பிடிக்காதே! எங்கள் இறைவனே! நீ எங்கள் மீது (கடினமான கட்டளைகளை விதித்து) பளுவான சுமையை

சுமத்திவிடாதே. எங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது (கடினமான கட்டளைகளை) நீ சுமத்தியவாறு (சுமத்தாதே!). எங்கள் இறைவனே! நாங்கள் தாங்க முடியாத கஷ்டங்களை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்களை பிழை பொறுப்பாயாக! எங்களை மன்னித்திடு! எங்கள் மீது கருணை புரிந்திடு! நீதான் எங்கள் உண்மையான எஜமானன்! ஆகவே, (உன்னை) நிராகரிக்கும் கூட்டங்கள் மீது (வெற்றி பெற) நீ எங்களுக்கு உதவி புரிந்திடு! (அல்குர்ஆன் 2 : 286)

رَبَّنَا لَا تُزِغْ قُلُوْبَنَا بَعْدَ اِذْ هَدَيْتَنَا
وَهَبْ لَنَا مِنْ لَّدُنْكَ رَحْمَةً ۚ
اِنَّكَ اَنْتَ الْوَهَّابُ ۝٨

28. எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நேரான வழியை அறிவித்ததன் பின்னர் எங்களுடைய உள்ளங்கள் (அதிலிருந்து) தவறிவிடுமாறு

செய்யாதே! உன் (அன்பான) அருளையும் எங்களுக்கு அளித்திடு! நிச்சயமாக நீயே பெரும் கொடையாளி! (அல்குர்ஆன் 3 : 8)

رَبَّنَا مَا خَلَقْتَ هٰذَا بَاطِلًا ۚ سُبْحٰنَكَ فَقِنَا
عَذَابَ النَّارِ ﴿١٩١﴾ رَبَّنَآ اِنَّكَ مَنْ تُدْخِلِ النَّارَ
فَقَدْ اَخْزَيْتَهٗ ؕ وَمَا لِلظّٰلِمِيْنَ مِنْ اَنْصَارٍ ﴿١٩٢﴾
رَبَّنَآ اِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُّنَادِىْ لِلْاِيْمَانِ
اَنْ اٰمِنُوْا بِرَبِّكُمْ فَاٰمَنَّا ۖ رَبَّنَا فَاغْفِرْ لَنَا
ذُنُوْبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّاٰتِنَا وَ تَوَفَّنَا مَعَ
الْاَبْرَارِ ﴿١٩٣﴾ رَبَّنَا وَاٰتِنَا مَا وَعَدْتَّنَا عَلٰى رُسُلِكَ
وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيٰمَةِ ؕ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ ﴿١٩٤﴾

29. எங்கள் இறைவனே! நீ இவற்றை வீணாகப் படைக்கவில்லை. நீ மிகத் தூயவன். (நரக)

நெருப்பின் வேதனையை விட்டு எங்களை நீ காப்பாற்று! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ எவர்களை (நரக) நெருப்பில் நுழைத்து விட்டாயோ அவர்களை நிச்சயமாக நீ இழிவு படுத்திவிட்டாய். (அத்தகைய) அநியாயக்காரர் களுக்கு உதவி செய்பவர்கள் (ஒருவரும்) இல்லை. எங்கள் இறைவனே! (உன் தூதரின்) அழைப்பை நாங்கள் நிச்சயமாக செவியுற்றோம். (அவர்) எங்களை நம்பிக்கையின் பக்கம் அழைத்து, ‘உங்கள் இறைவனை நம்பிக்கை கொள்ளுங்கள்’ என்று கூறினார். நாங்களும் (அவ்வாறே) நம்பிக்கை கொண்டோம். ஆதலால் எங்கள் இறைவனே! நீ எங்கள் குற்றங்களை மன்னித்து விடு! எங்கள் பாவங்களை எங்களை விட்டும் அகற்றிடு! (முடிவில்) நல்லோர்களுடன் எங்களை மரணிக்கும்படி செய்! எங்கள் இறைவனே! உன் தூதர்கள் மூலம் எங்களுக்கு நீ வாக்களித்ததை எங்களுக்குத் தா! மறுமை

நாளில் நீ எங்களை இழிவுபடுத்தி விடாதே! நிச்சயமாக நீ வாக்குறுதி தவறுபவன் அல்ல.

(அல்குர்ஆன் 3 : 191-194)

رَبَّنَآ اٰمَنَّا فَاغۡفِرۡ لَنَا وَارۡحَمۡنَا وَاَنۡتَ خَيۡرُ الرّٰحِمِيۡنَ ۚ ۖ ﴿۱۰۹﴾

30. எங்கள் இறைவனே! நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொண்டோம். நீ எங்களுக்கு மன்னிப்பு வழங்கு! எங்கள் மீது அருள் புரி! அருள் புரிபவர்களிலெல்லாம் நீ மிக்க மேலானவன்.

(அல்குர்ஆன் 23 : 109)

رَبَّنَا اصۡرِفۡ عَنَّا عَذَابَ جَهَنَّمَ ۖ اِنَّ عَذَابَهَا كَانَ غَرَامًا ۖ ﴿۶۵﴾ اِنَّهَا سَآءَتۡ مُسۡتَقَرًّا وَّ مُقَامًا ﴿۶۶﴾

31. "எங்கள் இறைவனே! நரகத்தின் வேதனையை எங்களை விட்டு நீ தடுத்துக் கொள்வாயாக! ஏனென்றால், நிச்சயமாக அதன் வேதனை நிலையான துன்பமாகும்." "சிறிது நேரமோ அல்லது


DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com

எப்பொழுதுமோ தங்குவதற்கும் அது மிகக்கெட்ட இடமாகும் (ஆகவே, அதில் இருந்து. எங்களை நீ பாதுகாத்துக்கொள்") (அல்குர்ஆன் 25 : 65,66)

رَبَّنَا هَبْ لَنَا مِنْ اَزْوَاجِنَا وَ ذُرِّيّٰتِنَا
قُرَّةَ اَعْيُنٍ وَّ اجْعَلْنَا لِلْمُتَّقِيْنَ اِمَامًا ﴿٧٤﴾

32. எங்கள் இறைவனே! எங்கள் மனைவிகள் மூலமாகவும் எங்கள் பிள்ளைகள் மூலமாகவும், எங்களுக்கு கண் குளிர்ச்சியைத் தா! மேலும் இறையச்சம் உள்ளவர்களுக்கு வழிகாட்டியாகவும் எங்களை ஆக்கு! (அல்குர்ஆன் 25 : 74)

رَبِّ اَوْزِعْنِيْٓ اَنْ اَشْكُرَ نِعْمَتَكَ الَّتِيْٓ
اَنْعَمْتَ عَلَيَّ وَعَلٰى وَالِدَيَّ وَاَنْ اَعْمَلَ صَالِحًا
تَرْضٰهُ وَ اَصْلِحْ لِيْ فِيْ ذُرِّيَّتِيْ ۚ اِنِّيْ
تُبْتُ اِلَيْكَ وَ اِنِّيْ مِنَ الْمُسْلِمِيْنَ ﴿١٥﴾

33. என் இறைவனே! நீ என் மீதும், என் தாய் தந்தை மீதும் புரிந்த அருளுக்காக உனக்கு நான் நன்றி செலுத்துவதற்கும் உன்னுடைய திருப்தியை அடையக்கூடிய நற்செயல்கள் செய்வதற்கும் நீ என்னைச் சீர்படுத்து! எனக்கு உதவியாக இருக்கும்படி என்னுடைய குடும்பத்தைச் சீர்படுத்தி வை! நிச்சயமாக நான் உன் பக்கமே திரும்பி விட்டேன். (உனக்கு) முற்றிலும் கீழ்ப்படிந்தவர்களில் நானும் ஒருவன். (அல்குர்ஆன் 46 : 15)

رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ رَءُوفٌ رَحِيمٌ ﴿١٠﴾

34. எங்கள் இறைவனே... எங்களையும் மன்னித்தருள்! எங்களுக்கு முன் நம்பிக்கை கொண்ட எங்களுடைய சகோதரர்களையும்

மன்னித்தருள்! நம்பிக்கை கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய உள்ளங்களில் குரோதங்களை வைத்து விடாதே! எங்கள் இறைவனே! நிச்சயமாக நீ மிகக் கிருபையுடையவனும், இரக்கமுடையவனுமாக இருக்கின்றாய்!

(அல்குர்ஆன் 59 : 10)

رَبَّنَآ اَتۡمِمۡ لَنَا نُوۡرَنَا وَاغۡفِرۡ لَنَا ۚ
اِنَّكَ عَلٰى كُلِّ شَىۡءٍ قَدِيۡرٌ ﴿۸﴾

35. எங்கள் இறைவனே! எங்களுக்கு எங்களுடைய பிரகாசத்தை (அணையாது) நீ பரிபூரணமாக்கி வை! எங்களுக்கு மன்னிப்பு வழங்கு! நிச்சயமாக நீ அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன்.

(அல்குர்ஆன் 66 : 8)

رَبَّنَآ اِنَّنَآ اٰمَنَّا فَاغۡفِرۡ لَنَا ذُنُوۡبَنَا
وَقِنَا عَذَابَ النَّارِ ۚ﴿۱۶﴾

36. “எங்கள் இறைவனே! நிச்சயமாக நாங்கள் (உன்னை) நம்பிக்கை கொள்கிறோம். ஆதலால், நீ எங்கள் பாவங்களை மன்னித்து (அருள் புரிந்து, நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் எங்களை காப்பாற்றுவாயாக!” என்றும் (தொடர்ந்து) பிரார்த்தித்துக் கொண்டு இருப்பார்கள்.

(அல்குர்ஆன் 3 : 16)

رَبَّنَآ اٰمَنَّا فَاكْتُبْنَا مَعَ الشّٰهِدِيْنَ ﴿٨٣﴾

37. எங்கள் இறைவனே! நாங்கள் நம்பிக்கை கொண்டோம். ஆகவே, சாட்சி கூறுபவர்களுடன் எங்களையும் நீ பதிவு செய்து கொள்!

(அல்குர்ஆன் 5 : 83)

رَبِّ اجْعَلْ هٰذَا الْبَلَدَ اٰمِنًا وَّاجْنُبْنِىْ وَبَنِىَّ اَنْ نَّعْبُدَ الْاَصْنَامَ ﴿٣٥﴾

38. என் இறைவா! இந்த ஊரை பாதுகாப்பு உடையதாக ஆக்கி வை! சிலைகளை வணங்குவதை

விட்டு என்னையும் என் சந்ததிகளையும் தூரமாக்கி வை! (அல்குர்ஆன் 14 : 35)

رَبِّ إِنِّي لِمَا أَنْزَلْتَ إِلَيَّ مِنْ خَيْرٍ فَقِيرٌ ﴿٢٤﴾

39. என் இறைவனே! நீ எனக்குத் தரும் எந்த நன்மையாயினும் சரி. நிச்சயமாக நான் அதற்கு மிகத் தேவையுள்ளவனாகவே இருக்கிறேன்.

(அல்குர்ஆன் 28 : 24)

رَبِّ انْصُرْنِي عَلَى الْقَوْمِ الْمُفْسِدِينَ ﴿٣٠﴾

40. என் இறைவனே! விஷமம் செய்யும் மக்களுக்கு எதிராக நீ எனக்கு உதவி செய்!

(அல்குர்ஆன் 29 : 30)

رَبَّنَا لَا تَجْعَلْنَا مَعَ الْقَوْمِ الظَّالِمِينَ ﴿٤٧﴾

41. எங்கள் இறைவனே! அநியாயக்கார மக்களுடன் (நரகத்தில்) எங்களையும் சேர்த்து விடாதே! (அல்குர்ஆன் 7 : 47)

حَسْبِيَ اللّٰهُ ۖ لَآ اِلٰهَ اِلَّا هُوَ ؕ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ ﴿۱۲۹﴾

42. அல்லாஹ்தான் எனக்குப் போதுமானவன்; அவனைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் அறவே இல்லை; என் காரியங்கள் அனைத்தையும் அவனிடமே நான் ஒப்படைத்து விட்டேன். அவன்தான் மகத்தான 'அர்ஷின்' அதிபதி. (அல்குர்ஆன் 9 : 129)

عَسٰى رَبِّيْٓ اَنْ يَّهْدِيَنِيْ سَوَآءَ السَّبِيْلِ ﴿۲۲﴾

43. என் இறைவன் நேரான வழியை எனக்கு அறிவிப்பான். (அல்குர்அன் 28 : 22)

رَبِّ نَجِّنِيْ مِنَ الْقَوْمِ الظّٰلِمِيْنَ ﴿۲۱﴾

44. என் இறைவனே! அக்கிரமக்கார மக்களிடம் இருந்து நீ என்னை பாதுகாத்துக் கொள்! (அல்குர்ஆன் 28 : 21)

رَبِّ ابْنِ لِىْ عِنْدَكَ بَيْتًا فِى الْجَنَّةِ

45. என் இறைவனே! உன்னிடத்தில் உள்ள சுவனபதியில் எனக்கு ஒரு வீட்டை அமைத்துக் கொடு! (அல்குர்ஆன் 66 : 11)

اَللّٰهُمَّ آتِنِيَ الْحِكْمَةَ الَّتِيْ مَنْ اُوْتِيَهَا فَقَدْ اُوْتِيَ خَيْرًا كَثِيْرًا

46. அல்லாஹ்வே! எனக்கு ஹிக்மா - ஞானத்தை வழங்கு, அந்த ஞானம் கொடுக்கப்பட்டவர் பெரும் நன்மையைக் கொடுக்கப்பட்டவராவார்.

(அல்பகறா 2 : 269வது வசனத்தின் கருத்திலிருந்து எடுக்கப்பட்டது)

---------

اَللّٰهُمَّ رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

47. அல்லாஹ்வே! இவ்வுலகத்திலும் எங்களுக்கு அழகியதைக் கொடு! மறுமையிலும் அழகியதைக் கொடு! நரக நெருப்பின் வேதனையை விட்டு எங்களைப் பாதுகாத்துக் கொள்!

(ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ النَّارِ وَعَذَابِ النَّارِ وَفِتْنَةِ الْقَبْرِ وَعَذَابِ الْقَبْرِ وَشَرِّ فِتْنَةِ الْغِنٰى وَشَرِّ فِتْنَةِ الْفَقْرِ، اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ، اَللّٰهُمَّ اغْسِلْ قَلْبِيْ بِمَاءِ الثَّلْجِ

وَالْبَرَدِ وَنَقِّ قَلْبِيْ مِنْ خَطَايَايَ كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الْأَبْيَضَ مِنَ الدَّنَسِ وَبَاعِدْ بَيْنِيْ وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ، اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْكَسَلِ وَالْمَأْثَمِ وَالْمَغْرَمِ

48. அல்லாஹ்வே! நரக நெருப்பின் சோதனையை விட்டும், நரக நெருப்பின் வேதனையை விட்டும், கப்ரின் சோதனையை விட்டும், கப்ரின் வேதனையை விட்டும், செல்வத்தால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கை விட்டும், வறுமையால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! மஸீஹ் தஜ்ஜால் மூலம் ஏற்படும் குழப்பத்தின் தீங்கைவிட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! பனிக் கட்டியைக் கொண்டும் ஆலங்கட்டியைக்

கொண்டும் எனது உள்ளத்தைக் கழுவிவிடு! வெண்மையான ஆடையை அழுக்கை விட்டு நீ சுத்தப்படுத்தியது போன்று குற்றங்களை விட்டு என் உள்ளத்தை நீ சுத்தப்படுத்தி விடு! கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடையில் நீ தூரத்தை ஏற்படுத்தியதைப் போன்று எனக்கும் எனது குற்றங்களுக்கும் இடையில் தூரத்தை ஏற்படுத்தி விடு! அல்லாஹ்வே! சோம்பேறித்தனம், பாவம், கடன் ஆகிய அனைத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَالْجُبْنِ وَالْبُخْلِ وَالْهَرَمِ، وَأَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ، وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ

49. அல்லாஹ்வே! பலவீனம், சோம்பேறித்தனம், கோழைத்தனம், கஞ்சத்தனம், வயோதிகம் ஆகிய

அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். கப்ரின் வேதனையை விட்டும், வாழ்க்கை மற்றும் மரணத்தில் ஏற்படும் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ جَهْدِ الْبَلَاءِ وَدَرَكِ الشَّقَاءِ وَسُوْءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الْأَعْدَاءِ

50. அல்லாஹ்வே! கடினமான சோதனையை விட்டும், கெடுதிகள் பீடிப்பதை விட்டும், விதிக்கப்பட்டதின் தீமையை விட்டும், எதிரிகளின் நகைப்பை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ أَصْلِحْ لِيْ دِيْنِيَ الَّذِيْ هُوَ عِصْمَةُ أَمْرِيْ، وَأَصْلِحْ لِيْ دُنْيَايَ الَّتِيْ فِيْهَا مَعَاشِيْ، وَأَصْلِحْ لِيْ

آخِرَتِيَ الَّتِيْ فِيْهَا مَعَادِيْ، وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِيْ فِيْ كُلِّ خَيْرٍ، وَاجْعَلِ الْمَوْتَ رَاحَةً لِيْ مِنْ كُلِّ شَرٍّ

51. அல்லாஹ்வே... எனது காரியத்திற்குப் பாதுகாப்பாக இருக்கும் எனது மார்க்கத்தை எனக்கு நீ சீர்படுத்தித் தா! நான் வாழும் எனது உலக வாழ்க்கையை எனக்கு சீர்படுத்தி தா! நான் மீள இருக்கும் எனது மறுமை வாழ்க்கையை எனக்கு சீர்படுத்தித் தா! நான் நன்மைகளை அதிகரிப்பதற்கு ஏற்றதாக வாழ்க்கையை ஆக்கு! மரணத்தை, எனக்கு தீமையை விட்டு ஓய்வாக ஆக்கு! (ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْهُدٰى وَالتُّقٰى وَالْعَفَافَ وَالْغِنٰى

52. அல்லாஹ்வே! நேர்வழி, உனது பயம்,

பத்தினித்தனம், செல்வம் ஆகிய அனைத்தையும் நிச்சயமாக நான் உன்னிடமே கேட்கிறேன்.
(ஸஹீஹ் முஸ்லிம்).

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَالْجُبْنِ وَالْبُخْلِ وَالْهَرَمِ وَعَذَابِ الْقَبْرِ، اَللّٰهُمَّ آتِ نَفْسِيْ تَقْوَاهَا وَزَكِّهَا أَنْتَ خَيْرُ مَنْ زَكَّاهَا ، أَنْتَ وَلِيُّهَا وَمَوْلَاهَا، اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عِلْمٍ لَا يَنْفَعُ وَمِنْ قَلْبٍ لَا يَخْشَعُ وَمِنْ نَفْسٍ لَا تَشْبَعُ وَمِنْ دَعْوَةٍ لَا يُسْتَجَابُ لَهَا

53. அல்லாஹ்வே! பலவீனம், சோம்பேறித்தனம், கோழைத்தனம், கஞ்சத்தனம், வயோதிகம், கப்ரின் வேதனை ஆகிய அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல்

தேடுகிறேன். அல்லாஹ்வே! என் உள்ளத்திற்கு அதற்குரிய பயத்தைக் கொடு! அதை நீ தூய்மைப்படுத்து! நீயே அதை மிகச் சிறந்த முறையில் தூய்மைப்படுத்துபவன். நீயே அதன் பாதுகாவலன். அதன் எஜமானன். அல்லாஹ்வே! பயனற்ற கல்வியை விட்டும், பயமற்ற உள்ளத்தை விட்டும், திருப்தி கொள்ளாத ஆன்மாவை விட்டும், ஏற்றுக் கொள்ளப்படாத பிரார்த்தனையை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ اهْدِنِيْ وَسَدِّدْنِيْ،
اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْهُدٰى وَالسَّدَادَ

54. அல்லாஹ்வே! எனக்கு நேர்வழி காட்டு! என்னை நேர்மையாளனாக ஆக்கு! அல்லாஹ்வே! நிச்சயமாக நான் நேர்வழியையும் நேர்மையையும் உன்னிடமே கேட்கிறேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ زَوَالِ نِعْمَتِكَ وَتَحَوُّلِ عَافِيَتِكَ وَفُجَاءَةِ نِقْمَتِكَ وَجَمِيْعِ سَخَطِكَ

55. அல்லாஹ்வே! நீ (எனக்குச்) செய்த அருள் (என்னிடமிருந்து) நீங்குவதை விட்டும், நீ வழங்கிய பரிபூரண சுகம் அகன்று விடுவதை விட்டும், திடீரென நீ தண்டிப்பதை விட்டும், உனது எல்லா விதமான கோபத்தை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُبِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ وَمِنْ شَرِّ مَالَمْ أَعْمَلْ

56. அல்லாஹ்வே! நான் செய்த செயல்களால் ஏற்படும் தீங்கை விட்டும், நான் செய்யாத செயல்களால் ஏற்படும் தீங்கை விட்டும் நிச்சயமாக

நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.
(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ أَكْثِرْ مَالِيْ وَوَلَدِيْ، وَبَارِكْ لِيْ فِيْمَا أَعْطَيْتَنِيْ، وَأَطِلْ حَيَاتِيْ عَلٰى طَاعَتِكَ، وَأَحْسِنْ عَمَلِيْ وَاغْفِرْلِيْ

57. அல்லாஹ்வே! என் செல்வத்தையும், என் சந்ததியையும் அதிகப்படுத்து! நீ எனக்கு கொடுத்தவற்றில் பரக்கத்தை ஏற்படுத்து! உனது வணக்க வழிபாட்டில் எனக்கு நீண்ட வாழ்க்கையைத் தா! என் அமல்களை அழகுபடுத்து! என்னை மன்னித்து விடு!
(ஸஹீஹுல் புகாரி, அல்அதபுல் முஃப்ரத்)

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ الْعَظِيْمُ الْحَلِيْمُ، لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ، لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ رَبُّ السَّمَاوَاتِ وَرَبُّ الْأَرْضِ وَرَبُّ الْعَرْشِ الْكَرِيمِ

58. மகத்துவமிக்க, சகிப்புத் தன்மை உடைய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. மகத்தான அர்ஷின் அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. வானங்களின் இறைவனான, பூமியின் இறைவனான, சங்கை மிகுந்த அர்ஷின் இறைவனான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை. (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ رَحْمَتَكَ أَرْجُوْ فَلَا تَكِلْنِي إِلٰى نَفْسِي طَرْفَةَ عَيْنٍ وَأَصْلِحْ لِيْ شَأْنِيْ كُلَّهُ، لَا إِلٰهَ إِلَّا أَنْتَ

59. அல்லாஹ்வே! உன் அருளை ஆதரவு வைக்கிறேன். கண் சிமிட்டும் நேரமளவு கூட என்னை என் பக்கம் பொறுப்பு ஒப்படைத்து விடாதே! எனது எல்லாக் காரியத்தையும் எனக்கு

சீர்படுத்தித் தா! உன்னைத் தவிர வணக்கத்திற்கு உரியவன் வேறு யாருமில்லை. (ஸுனன் அபூதாவூது)

لَا إِلٰهَ إِلَّا أَنْتَ سُبْحَانَكَ إِنِّيْ كُنْتُ مِنَ الظَّالِمِيْنَ

60. உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. நிச்சயமாக நான் அநீதி இழைத்துக் கொண்டவர்களில் ஒருவனாக இருக்கிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ عَبْدُكَ وَابْنُ عَبْدِكَ وَابْنُ أَمَتِكَ، نَاصِيَتِيْ بِيَدِكَ ، مَاضٍ فِيَّ حُكْمُكَ ، عَدْلٌ فِيَّ قَضَاؤُكَ، أَسْأَلُكَ بِكُلِّ اسْمٍ هُوَ لَكَ سَمَّيْتَ بِهِ نَفْسَكَ أَوْ عَلَّمْتَهُ أَحَدًا مِنْ خَلْقِكَ أَوْ أَنْزَلْتَهُ فِيْ كِتَابِكَ أَوِ اسْتَأْثَرْتَ بِهِ فِيْ عِلْمِ الْغَيْبِ عِنْدَكَ أَنْ

تَجْعَلَ الْقُرْآنَ رَبِيْعَ قَلْبِيْ وَنُوْرَ صَدْرِيْ وَجَلَاءَ حُزْنِيْ وَذَهَابَ هَمِّيْ

61. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உனது அடிமை. உன் அடிமையின் மகன். உனது அடிமைப் பெண்ணின் மகன். என் உச்சி முடி உன் கையில்தான் இருக்கிறது. என்னில் உன் தீர்ப்பு நிறைவேறியே தீரும். என் விஷயத்தில் உனது தீர்ப்பு மிக நீதமானது. உனக்கென நீ வைத்துக் கொண்ட அல்லது உனது நூலில் கூறியிருக்கும் அல்லது உனது படைப்பினங்களில் ஒருவருக்கும் நீ கற்றுக் கொடுத்திருக்கும் அல்லது உன்னிடத்தில் உள்ள மறைவான அறிவில் நீ மட்டும் தெரிந்து வைத்திருக்கும் அனைத்து பெயர்களைக் கொண்டும் உன்னிடம் நான் கேட்கிறேன், குர்ஆனை என் உள்ளத்திற்கு வசந்தமாக என் இதயத்திற்குப் பிரகாசமாக, என்

கவலையை அகற்றக்கூடியதாக என் துக்கத்தை நீக்கக் கூடியதாக ஆக்கிவிடு! (முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ مُصَرِّفَ الْقُلُوْبِ صَرِّفْ
قُلُوْبَنَا عَلٰى طَاعَتِكَ

62. உள்ளங்களைத் திருப்பக்கூடியவனே! உனது வணக்க வழிபாட்டின் மீது என் உள்ளத்தைத் திருப்பி வை! (ஸஹீஹ் முஸ்லிம்)

يَا مُقَلِّبَ الْقُلُوْبِ ثَبِّتْ قَلْبِيْ عَلٰى دِيْنِكَ

63. உள்ளங்களைப் புரட்டக்கூடியவனே! உனது மார்க்கத்தின் மீது என் உள்ளத்தை நிலைப்படுத்தி வை! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ

64. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம்

இவ்வுலகத்திலும் மறுமையிலும் பூரண சுகத்தைக் கேட்கிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ أَحْسِنْ عَاقِبَتَنَا فِي الْأُمُوْرِ كُلِّهَا، وَأَجِرْنَا مِنْ خِزْيِ الدُّنْيَا وَعَذَابِ الْآخِرَةِ

65. அல்லாஹ்வே! எல்லாக் காரியங்களிலும் எங்களது முடிவை அழகாக்கி வை! இவ்வுலகத்தின் இழிவை விட்டும், மறு உலகத்தின் வேதனையை விட்டும் எங்களைப் பாதுகாத்துக் கொள்!

(முஸ்னது அஹ்மது)

رَبِّ أَعِنِّيْ وَلَا تُعِنْ عَلَيَّ وَانْصُرْنِيْ وَلَا تَنْصُرْ عَلَيَّ وَامْكُرْ لِيْ وَلَا تَمْكُرْ عَلَيَّ وَاهْدِنِيْ وَيَسِّرِ الْهُدٰى لِيْ وَانْصُرْنِيْ عَلٰى مَنْ بَغٰى عَلَيَّ، رَبِّ اجْعَلْنِيْ لَكَ شَكَّارًا، لَكَ ذَكَّارًا ، لَكَ رَهَّابًا ،

لَكَ مُطِيْعًا ، لَكَ مُخْبِتًا، إِلَيْكَ أَوَّاهًا مُنِيبًا، رَبِّ تَقَبَّلْ تَوْبَتِيْ وَاغْسِلْ حَوْبَتِيْ وَأَجِبْ دَعْوَتِيْ وَاهْدِ قَلْبِيْ وَسَدِّدْ لِسَانِيْ وَثَبِّتْ حُجَّتِيْ وَاسْلُلْ سَخِيْمَةَ قَلْبِيْ

66. என் இறைவா! (என் எதிரிகள் விஷயத்தில்) எனக்கு சாதகமாக உதவி செய்! எனக்கு எதிராக உதவி செய்து விடாதே! (நன்மைகளை செய்வதற்கு) எனக்கு உதவி செய்! எனக்கெதிராக உதவி செய்து விடாதே! எனக்கு சாதகமாக சூழ்ச்சி செய்! எனக்கு எதிராக சூழ்ச்சி செய்து விடாதே! எனக்கு நேர்வழி காட்டு! எனக்கு நேர்வழியை இலேசாக்கிக் கொடு! என் மீது அநியாயம் செய்பவருக்கு எதிராக எனக்கு உதவி செய்! என் இறைவா! என்னை உனக்கு

அதிகமாக நன்றி செலுத்துபவனாக, உன்னை அதிகமாக நினைப்பவனாக, உனக்கு அதிகம் பயந்தவனாக, உனக்கு அதிகம் கீழ்ப்படிந்தவனாக, உனக்கு அதிகம் பயந்து, பணிந்து நடப்பவனாக, உன்னிடம் அதிகம் பிரார்த்திப்பவனாக (மென்மையான உள்ளம் உள்ளவனாக), உன் பக்கம் முற்றிலும் திரும்பியவனாக (என்னை) ஆக்கிவிடு! என் இறைவா! எனது பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்! எனது பாவத்தைக் கழுவி விடு! என் அழைப்புக்குப் பதில் கொடு! என் உள்ளத்திற்கு நேர்வழி காட்டு! எனது நாவை நேர்மைப்படுத்து! என் ஆதாரத்தை உறுதிப்படுத்து! என் உள்ளத்திலுள்ள குரோதத்தை நீக்கிவிடு! (ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ إِنَّا نَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ، وَنَعُوْذُ بِكَ مِنْ

شَرِّ مَا اسْتَعَاذَ مِنْهُ نَبِيُّكَ مُحَمَّدٌ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، وَأَنْتَ الْمُسْتَعَانُ وَعَلَيْكَ الْبَلَاغُ، وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ

67. அல்லாஹ்வே! உன்னுடைய நபி முஹம்மது ﷺ உன்னிடம் கேட்ட நன்மையை நாங்களும் உன்னிடம் கேட்கிறோம். உன்னுடைய நபி முஹம்மது ﷺ உன்னிடம் பாதுகாப்புத் தேடிய தீமைகளை விட்டு நாங்களும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறோம். உன்னிடமே உதவி தேடப்படுகிறது. உன்னிடமே எடுத்துச் சொல்லப் படுகிறது. பாவத்தை விட்டு மீளவோ நன்மை செய்ய சக்தி பெறவோ முடியாது, அல்லாஹ்வைக் கொண்டே தவிர. (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ سَمْعِيْ وَمِنْ شَرِّ

بَصَرِيْ وَمِنْ شَرِّ لِسَانِيْ وَمِنْ شَرِّ قَلْبِيْ وَمِنْ شَرِّ مَنِيِّيْ

68. அல்லாஹ்வே! எனது செவியின் தீமையை விட்டும், எனது பார்வையின் தீமையை விட்டும், எனது நாவின் தீமையை விட்டும், எனது உள்ளத்தின் தீமையை விட்டும், எனது இந்திரியத்தின் தீமையை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْبَرَصِ وَالْجُنُوْنِ وَالْجُذَامِ وَمِنْ سَيِّئِ الْأَسْقَامِ

69. அல்லாஹ்வே! வெண்குஷ்டம், பைத்தியம், சொறி மற்றும் எல்லா கெட்ட நோய்களை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِن مُّنْكَرَاتِ الْأَخْلَاقِ
وَالْأَعْمَالِ وَالْأَهْوَاءِ

70. அல்லாஹ்வே! கெட்ட குணங்கள் கெட்ட செயல்கள் கெட்ட ஆசைகள் அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنَّكَ عُفُوٌّ كَرِيْمٌ تُحِبُّ الْعَفْوَ
فَاعْفُ عَنِّيْ

71. அல்லாஹ்வே! நிச்சயமாக நீ மன்னிப்பவன்; சங்கையாளன்; மன்னிப்பதை விரும்புகிறாய்; ஆகவே, என்னை மன்னித்து விடு!
(ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ فِعْلَ الْخَيْرَاتِ وَتَرْكَ الْمُنْكَرَاتِ

وَحُبَّ الْمَسَاكِيْنِ، وَأَنْ تَغْفِرَ لِيْ وَتَرْحَمَنِيْ وَإِذَا أَرَدْتَ فِتْنَةَ قَوْمٍ فَتَوَفَّنِيْ غَيْرَ مَفْتُوْنٍ، أَسْأَلُكَ حُبَّكَ وَحُبَّ مَنْ يُحِبُّكَ وَحُبَّ عَمَلٍ يُقَرِّبُ إِلٰى حُبِّكَ

72. அல்லாஹ்வே! நன்மைகளைச் செய்வதற்கு, தீமைகளை விடுவதற்கு, ஏழைகளை விரும்புவதற்கு அருளை உன்னிடம் நான் கேட்கிறேன். மேலும், நீ எனக்குப் பிழை பொறுப்பைத் தா; எனக்கு கருணை காட்டு என்றும் உன்னிடம் கேட்கிறேன். ஒரு கூட்டத்தினரை நீ சோதிக்க நாடினால் அந்த சோதனையிலிருந்து பாதுகாக்கப்பட்டவனாக என் உயிரைக் கைப்பற்றிக் கொள்! உன் அன்பை, உன்னை விரும்புவோரின் அன்பை, உனது அன்பிற்கு என்னை நெருக்கி வைக்கும்

செயல்களின் ஆசையை உன்னிடம் நான் கேட்கிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ مِنَ الْخَيْرِ كُلِّهِ عَاجِلِهِ وَآجِلِهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ، وَأَعُوْذُ بِكَ مِنَ الشَّرِّ كُلِّهِ عَاجِلِهِ وَآجِلِهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ عَبْدُكَ وَنَبِيُّكَ ﷺ وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا عَاذَ مِنْهُ عَبْدُكَ وَنَبِيُّكَ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْجَنَّةَ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ، وَأَعُوْذُ بِكَ مِنَ النَّارِ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ، وَأَسْأَلُكَ أَنْ تَجْعَلَ كُلَّ قَضَاءٍ تَقْضِيهِ لِيْ خَيْرًا

73. அல்லாஹ்வே! சீக்கிரமாக வரக்கூடியது, தாமதமாக வரக்கூடியது, நான் அறிந்து வைத்திருக்கும், நான் அறியாமல் வைத்திருக்கும் எல்லா நன்மைகளையும் உன்னிடம் கேட்கிறேன். சீக்கிரமாக வரக்கூடியது, தாமதமாக வரக்கூடியது, நான் அறிந்து வைத்திருக்கும், நான் அறியாமல் வைத்திருக்கும் எல்லாத் தீமைகளைவிட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! உனது அடிமையும் உனது தூதரும் உன்னிடம் கேட்ட எல்லா நன்மைகளையும் நிச்சயமாக நானும் உன்னிடம் கேட்கிறேன். உனது அடிமையும் உனது தூதரும் உன்னிடம் பாதுகாப்புத் தேடிய அனைத்து தீமையைவிட்டு நானும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் சொர்க்கத்தையும் அதை எனக்கு நெருக்கமாக்கித்தரும் சொல், செயலையும் உன்னிடம் கேட்கிறேன். நரகத்தை விட்டும் அதில் கொண்டு போய் சேர்க்கும்

சொல் செயலை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீ எனக்கு விதிக்கின்ற எல்லாத் தீர்ப்பையும் நன்மையாக ஆக்கித் தரும்படி உன்னிடமே கேட்கிறேன்.(முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ احْفَظْنِيْ بِالْاِسْلَامِ قَائِمًا وَاحْفَظْنِيْ بِالْاِسْلَامِ قَاعِدًا وَاحْفَظْنِيْ بِالْاِسْلَامِ رَاقِدًا، وَلَا تُشْمِتْ بِيْ عَدُوًّا وَلَاحَاسِدًا، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ مِنْ كُلِّ خَيْرٍ خَزَائِنُهُ بِيَدِكَ، وَأَعُوْذُبِكَ مِنْ كُلِّ شَرٍّ خَزَائِنُهُ بِيَدِكَ

74. அல்லாஹ்வே! நான் நிற்கும்போது இஸ்லாமைக் கொண்டே என்னைப் பாதுகாத்துக் கொள்! நான் உட்காரும்போதும் இஸ்லாமைக் கொண்டே என்னைப் பாதுகாத்துக்கொள்! நான்

தூங்கும்போதும் இஸ்லாமைக் கொண்டே என்னைப் பாதுகாத்துக்கொள்! எதிரியோ பொறாமைக்காரனோ என்னைக் கொண்டு நகைப்புறும்படி செய்து விடாதே! அல்லாஹ்வே! உனது கையில் உள்ள நன்மையின் பொக்கிஷங்களில் இருந்து உன்னிடம் கேட்கிறேன். உனது கையில் உள்ள தீமையின் பொக்கிஷங்களைவிட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ اقْسِمْ لَنَا مِنْ خَشْيَتِكَ مَا تَحُوْلُ بِهِ بَيْنَنَا وَبَيْنَ مَعَاصِيْكَ وَمِنْ طَاعَتِكَ مَا تُبَلِّغُنَا بِهِ جَنَّتَكَ وَمِنَ الْيَقِيْنِ مَا تُهَوِّنُ بِهِ عَلَيْنَا مَصَائِبَ الدُّنْيَا، اَللّٰهُمَّ مَتِّعْنَا بِأَسْمَاعِنَا وَأَبْصَارِنَا وَقُوَّاتِنَا مَا أَحْيَيْتَنَا. وَاجْعَلْهُ الْوَارِثَ مِنَّا وَاجْعَلْ ثَأْرَنَا عَلٰى

مَنْ ظَلَمَنَا وَانْصُرْنَا عَلٰى مَنْ عَادَانَا وَلَا تَجْعَلْ مُصِيْبَتَنَا فِيْ دِيْنِنَا وَلَا تَجْعَلِ الدُّنْيَا أَكْبَرَ هَمِّنَا وَلَا مَبْلَغَ عِلْمِنَا وَلَا تُسَلِّطْ عَلَيْنَا مَن لَّا يَرْحَمُنَا

75. அல்லாஹ்வே! பாவங்களுக்கும் எங்களுக்குமிடையில் தடையாக இருக்கும் உனது அச்சத்தை எங்களுக்கு வழங்கு! உனது சொர்க்கத்தை நீ எங்களுக்கு தருமளவு உனது வழிபாட்டை எங்களுக்குத் தா! உலகத்தின் சோதனைகளை நீ எங்களுக்கு இலகுவாக்கித் தரும் நம்பிக்கையைத் தா! அல்லாஹ்வே... எங்களது செவிகளில், எங்களது பார்வைகளில், எங்களது ஆற்றல்களில், எங்களை நீ உயிராக வைத்திருக்கும் காலம் வரைக்கும் எங்களுக்கு சுகத்தைத் தா! எங்களுக்கு வாரிசைத் தா! எங்கள் கோபத்தை எங்களுக்கு அநீதி செய்தவர் மீது ஏற்படுத்தி விடு! எங்களைப் பகைத்துக்

கொண்டவர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்! எங்கள் மார்க்க விஷயத்தில் எங்களை சோதித்து விடாதே! உலகத்தை எங்களுக்குப் பெரும் கவலையாகவும் எங்கள் அறிவின் முதிர்ச்சியாகவும் ஆக்கி விடாதே! எங்களுக்கு இரக்கம் காட்டாதவரை எங்கள் மீது சாட்டி விடாதே! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْبُخْلِ، وَأَعُوْذُ بِكَ مِنَ الْجُبْنِ، وَأَعُوْذُ بِكَ أَنْ أُرَدَّ إِلٰى أَرْذَلِ الْعُمُرِ، وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا، وَأَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ

76. அல்லாஹ்வே! கோழைத்தனத்தை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். கஞ்சத்தனத்தை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். பலவீனமான வயதை அடைவதை விட்டு நான் உன்னிடம்

பாதுகாவல் தேடுகிறேன். உலகத்தின் குழப்பத்தை விட்டும் கப்ரின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸஹீஹுல் புகாரி)

**اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ خَطِيْئَتِيْ وَجَهْلِيْ وَإِسْرَافِيْ فِيْ أَمْرِيْ وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّيْ. اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ جِدِّيْ وَهَزْلِيْ وَخَطَئِيْ وَعَمْدِيْ وَكُلُّ ذٰلِكَ عِنْدِيْ**

77. அல்லாஹ்வே! எனது குற்றத்தை, என் அறியாமையை, எனது காரியத்தில் நான் வரம்பு மீறியதை என்னைவிட அதிகமாக நீ அறிந்திருக்கும் என் குறைகளை எனக்கு மன்னித்தருள்! அல்லாஹ்வே! எனது விளையாட்டையும் எனது வினையத்தையும் எனது தவறையும் நான் நாடி செய்ததையும்

எனக்கு மன்னித்தருள்! இவை அனைத்தும் என்னிடம் இருக்கத்தான் செய்கின்றன. (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ ظُلْمًا كَثِيْرًا. وَلَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ، فَاغْفِرْ لِيْ مَغْفِرَةً مِنْ عِنْدِكَ وَارْحَمْنِيْ، إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

78. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் என் ஆத்மாவிற்கு பெரும் அநியாயம் செய்து கொண்டேன். உன்னைத் தவிர பாவங்களை மன்னிப்பவர் இல்லை. உன் புறத்திலிருந்து எனக்கு மன்னிப்பை வழங்கு. எனக்கு கருணை காட்டு. நிச்சயமாக நீதான் மகா மன்னிப்பாளன்; நிகரற்ற அன்புடையவன். (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ لَكَ أَسْلَمْتُ وَبِكَ آمَنْتُ وَعَلَيْكَ تَوَكَّلْتُ

وَإِلَيْكَ أَنَبْتُ وَبِكَ خَاصَمْتُ، اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِعِزَّتِكَ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ أَنْ تُضِلَّنِيْ، أَنْتَ الْحَيُّ الَّذِيْ لَا يَمُوْتُ، وَالْجِنُّ وَالْإِنْسُ يَمُوْتُوْنَ

79. அல்லாஹ்வே! உனக்கே பணிந்தேன். உன்னைக்கொண்டே நம்பிக்கை கொண்டேன். உன்னிடமே பொறுப்பை ஒப்படைத்தேன். உன் பக்கமே திரும்பினேன். உன்னைக்கொண்டே வாதிடுகிறேன். உன்னைத் தவிர வணக்கத்திற்கு உரியவன் வேறு யாருமில்லை. அல்லாஹ்வே! உனது கண்ணியத்தைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன். என்னை நீ வழிதவறச் செய்து விடாதே! நீ என்றும் மரணிக்காது உயிருடன் இருப்பவன். ஜின்களும் மனிதர்களும் மரணித்து விடுவார்கள். (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنَّا نَسْأَلُكَ مُوْجِبَاتِ رَحْمَتِكَ وَعَزَائِمَ

مَغْفِرَتِكَ وَالسَّلَامَةَ مِنْ كُلِّ إِثْمٍ وَالْغَنِيْمَةَ مِنْ كُلِّ بِرٍّ وَالْفَوْزَ بِالْجَنَّةِ وَالنَّجَاةَ مِنَ النَّارِ

80. அல்லாஹ்வே! உனது கருணைக்குக் காரணமானவற்றை, உனது மன்னிப்பைத் தரும் அமல்களை, அனைத்துப் பாவத்தில் இருந்தும் விடுதலையை, எல்லா நன்மைகளின் பாக்கியத்தை, சொர்க்கத்தின் வெற்றியை, நரகத்தின் விடுதலையை நிச்சயமாக நாங்கள் உன்னிடம் கேட்கிறோம். (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ اجْعَلْ أَوْسَعَ رِزْقِكَ عَلَيَّ عِنْدَ كِبَرِ سِنِّيْ وَانْقِطَاعِ عُمُرِيْ

81. அல்லாஹ்வே! எனது வயோதிகத்திலும் எனது ஆயுளின் இறுதியிலும் எனக்கு விசாலமான வாழ்க்கை வசதியைத் தா! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ ذَنْبِيْ وَوَسِّعْ لِيْ
فِيْ دَارِيْ وَبَارِكْ لِيْ فِيْ رِزْقِيْ

82. அல்லாஹ்வே! என் பாவங்களை எனக்கு மன்னித்தருள்! எனக்கு என் வீட்டில் வசதியை ஏற்படுத்து! எனது வாழ்க்கைத் தரத்தில் பரக்கத் செய்! (முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ وَرَحْمَتِكَ.
فَاِنَّهُ لَا يَمْلِكُهَا اِلَّا أَنْتَ

83. அல்லாஹ்வே! உனது கிருபையையும் உனது கருணையையும் உன்னிடம் கேட்கிறேன். உன்னைத் தவிர அதற்கு உரிமையாளன் வேறு யாரும் இல்லை. (முஃஜமுத் தப்ரானி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ التَّرَدِّيْ وَالْهَدْمِ

وَالْغَرَقِ وَالْحَرَقِ. وَأَعُوْذُ بِكَ أَنْ يَتَخَبَّطَنِيَ الشَّيْطَانُ عِنْدَ الْمَوْتِ، وَأَعُوْذُ بِكَ أَنْ أَمُوْتَ فِيْ سَبِيْلِكَ مُدْبِرًا، وَأَعُوْذُ بِكَ أَنْ أَمُوْتَ لَدِيْغًا

84. அல்லாஹ்வே! கீழே விழுந்து, இடிபாடுகளில் சிக்கி, நீரில் மூழ்கி, நெருப்பில் எரிந்து மரணிப்பதை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மரண நேரத்தில் ஷைத்தான் என்னைக் குழப்பத்தில் ஆழ்த்துவதை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். உனது பாதையில் பின் வாங்கியவனாக நான் மரணிப்பதை விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். விஷ ஜந்துக்களால் தீண்டப்பட்டு மரணிப்பதை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

(ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْجُوْعِ، فَإِنَّهُ بِئْسَ

الضَّجِيْعُ، وَأَعُوْذُ بِكَ مِنَ الْخِيَانَةِ، فَإِنَّهَا بِئْسَتِ الْبِطَانَةُ

85. அல்லாஹ்வே! பசியை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நிச்சயமாக அது என்னுடன் தூங்குபவர்களில் மிகக் கெட்டதாகும். மோசடித் தனத்தை விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். அது உள்ரங்க குணங்களில் மிகக் கெட்டதாகும்.

(ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ وَالْجُبْنِ وَالْبُخْلِ وَالْهَرَمِ وَالقَسْوَةِ وَالْغَفْلَةِ وَالْعَيْلَةِ وَالذِّلَّةِ وَالْمَسْكَنَةِ، وَأَعُوْذُبِكَ مِنَ الْفَقْرِ وَالْكُفْرِ وَالْفُسُوْقِ وَالشِّقَاقِ وَالنِّفَاقِ وَالسُّمْعَةِ وَالرِّيَاءِ،

وَأَعُوْذُبِكَ مِنَ الصَّمَمِ وَالْبَكْمِ وَالْجُنُوْنِ وَالْجُذَامِ وَالْبَرَصِ وَسَيِّءِ الْأَسْقَامِ

86. அல்லாஹ்வே! பலவீனம், சோம்பேறித்தனம், கோழைத்தனம், கஞ்சத்தனம், வயோதிகம், உள்ளம் இறுகுதல், அலட்சியம், வறுமை, இழிவு, தேவையாகுதல் ஆகிய அனைத்தையும் விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். ஏழ்மை, நிராகரித்தல், பாவம், முரண்படுதல், நயவஞ்சகத்தனம், புகழை விரும்புதல், முகஸ்துதி ஆகிய அனைத்தையும் விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். செவிட்டுத்தனம், ஊமையாகுதல், பைத்தியமாகுதல், குஷ்டம், வெண்குஷ்டம், கெட்ட நோய்கள் ஆகிய அனைத்தையும் விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْفَقْرِ وَالْقِلَّةِ وَالذِّلَّةِ، وَأَعُوْذُ بِكَ مِنْ أَنْ أَظْلِمَ أَوْ أُظْلَمَ

87. அல்லாஹ்வே! ஏழ்மை, குறைதல் மற்றும் இழிவடைதலைவிட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நான் அநீதி இழைப்பதை விட்டும் எனக்கு அநீதி இழைக்கப்படுவதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُبِكَ مِنْ جَارِ السُّوْءِ فِي دَارِ الْمُقَامَةِ، فَإِنَّ جَارَ الْبَادِيَةِ يَتَحَوَّلُ

88. அல்லாஹ்வே! நான் நிரந்தரமாக தங்கி இருக்கும் உள்ளூரில் தீய அண்டை வீட்டார் அமைவதை விட்டு நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். பாலைவனம் போன்றவற்றில்

(தற்காலிகமாக தங்கக்கூடிய இடத்தில்) உள்ள அண்டை வீட்டார் மாறிக்கொண்டே இருப்பார்.
(ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ قَلْبٍ لَا يَخْشَعُ وَمِنْ دُعَاءٍ لَا يُسْمَعُ وَمِنْ نَفْسٍ لَا تَشْبَعُ وَمِنْ عِلْمٍ لَا يَنْفَعُ، أَعُوْذُ بِكَ مِنْ هٰؤُلَاءِ الْأَرْبَعِ

89. அல்லாஹ்வே! பயமற்ற உள்ளத்தைவிட்டும், ஏற்கப்படாத பிரார்த்தனையை விட்டும், திருப்தி கொள்ளாத ஆன்மாவை விட்டும், பயனற்ற கல்வியை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இந்த நான்கை விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.
(ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ يَوْمِ السُّوْءِ وَمِنْ لَيْلَةِ

السُّوْءِ وَمِنْ سَاعَةِ السُّوْءِ وَمِنْ صَاحِبِ السُّوْءِ وَمِنْ جَارِ السُّوْءِ فِيْ دَارِ الْمُقَامَةِ

90. அல்லாஹ்வே! தீய நாளை விட்டும், தீய இரவை விட்டும், தீய நேரத்தை விட்டும், தீய நண்பரை விட்டும், உள்ளூரில் தீய அண்டை வீட்டார் அமைவதை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(முஃஜமுத் தப்ரானி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْجَنَّةَ وَأَسْتَجِيْرُبِكَ مِنَ النَّارِ

91. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் சொர்க்கத்தைக் கேட்கிறேன். நரகத்தை விட்டு பாதுகாவல் தேடுகிறேன். (ஜாமிவுத் திர்மிதி)

(இதை மூன்று முறை ஓதவேண்டும்)

اَللّٰهُمَّ فَقِّهْنِيْ فِى الدِّيْنِ

92. அல்லாஹ்வே! மார்க்கத்தில் எனக்கு ஞானத்தைக் கொடு! (ஸஹீஹுல் புகாரி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ أَنْ اُشْرِكَ بِكَ
وَأَنَا أَعْلَمُ وَأَسْتَغْفِرُكَ لِمَا لَا أَعْلَمُ

93. அல்லாஹ்வே! நான் அறிந்த நிலையில் உனக்கு இணைவைப்பதை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நான் அறியாதவற்றிற்கு உன்னிடம் மன்னிப்புக் கேட்கிறேன்.

(முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ انْفَعْنِيْ بِمَا عَلَّمْتَنِيْ وَعَلِّمْنِيْ
مَا يَنْفَعُنِيْ وَزِدْنِيْ عِلْمًا

94. அல்லாஹ்வே! எனக்கு நீ கற்றுக் கொடுத்தக் கல்வியைக் கொண்டு எனக்குப் பலன் தா! எனக்குப் பலன் தருவதை எனக்குக் கற்றுக்

கொடு! கல்வியை எனக்கு அதிகரித்துக் கொடு.

(ஸுனன் இப்னு மாஜா)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ عِلْمًا نَافِعًا وَرِزْقًا طَيِّبًا وَعَمَلًا مُتَقَبَّلا

95. அல்லாஹ்வே! பலன் தரும் கல்வியை, தூய்மையான உணவை, ஏற்றுக்கொள்ளப்பட்ட அமலை நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன்.

(ஸுனன் இப்னு மாஜா)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ يَا أَللّٰهُ بِأَنَّكَ الْوَاحِدُ الْأَحَدُ الصَّمَدُ الَّذِيْ لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ أَنْ تَغْفِرَ لِيْ ذُنُوْبِيْ، إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

96. அல்லாஹ்வே! நிச்சயமாக நீ தனித்தவன்; ஒருவன்; தேவையற்றவன்; யாரையும் பெற்றெடுக்காதவன்; யாருக்கும் பிறக்காதவன்; தன்னிகரற்றவன் என்று உன்னைப் போற்றி, உன்னிடம் கேட்கிறேன். எனது குற்றங்களையெல்லாம் எனக்கு மன்னித்தருள்! நிச்சயமாக நீயே மகா மன்னிப்பாளன்; நிகரற்ற அன்புடையவன். (ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ بِأَنَّ لَكَ الْحَمْدَ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ (وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ) اَلْمَنَّانُ (يَا) بَدِيْعُ السَّمَوَاتِ وَالْأَرْضِ ذُوالْجَلَالِ وَالْإِكْرَامِ يَاحَيُّ يَاقَيُّوْمُ إِنِّيْ أَسْأَلُكَ (الْجَنَّةَ وَأَعُوْذُبِكَ مِنَ النَّارِ)

97. அல்லாஹ்வே! உன்னைப் போற்றிப் புகழ்ந்து உன்னிடம் கேட்கிறேன். உனக்கே

புகழ் அனைத்தும் சொந்தமானது. உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. (நீ தனித்தவன்; உனக்கு இணை, துணை இல்லை; நீ) மாபெரும் உபகாரி; வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றி படைத்தவனே! சங்கைமிக்கவனே! கண்ணியமிக்கவனே! என்றும் உயிரோடு இருப்பவனே! நிர்வகிப்பவனே! நிச்சயமாக நான் உன்னிடம் (சொர்க்கத்தைக்) கேட்கிறேன். (நரகத்தை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.) (ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ بِـأَنِّيْ أَشْهَدُ أَنَّكَ أَنْتَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ الْأَحَدُ الصَّمَدُ الَّذِيْ لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُن لَّهُ كُفُوًا أَحَدٌ

98. அல்லாஹ்வே! நிச்சயமாக நீதான் அல்லாஹ்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு

யாருமில்லை. நீ தனித்தவன்; தேவையற்றவன்; யாரையும் பெற்றெடுக்காதவன்; யாருக்கும் பிறக்காதவன்; தன்னிகரற்றவன் என்று நான் சாட்சி கூறி உன்னிடம் கேட்கிறேன்.

(ஸுனன் அபூதாவூது)

رَبِّ اغْفِرْلِيْ وَتُبْ عَلَيَّ اِنَّكَ أَنْتَ التَّوَّابُ الْغَفُوْرُ

99. என் இறைவா! எனக்கு மன்னிப்பு வழங்கு! என் பிழை பொறுப்பை ஏற்றுக்கொள்! நிச்சயமாக நீதான் பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்பவன்; மகா மன்னிப்பாளன். (ஸுனன் அபூதாவூது)

اَللّٰهُمَّ بِعِلْمِكَ الْغَيْبَ وَقُدْرَتِكَ عَلَى الْخَلْقِ أَحْيِنِيْ مَا عَلِمْتَ الْحَيَاةَ خَيْرًا لِّيْ وَتَوَفَّنِيْ إِذَا عَلِمْتَ الْوَفَاةَ خَيْرًا لِّيْ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ خَشْيَتَكَ

فِي الْغَيْبِ وَالشَّهَادَةِ، وَأَسْأَلُكَ كَلِمَةَ الْحَقِّ فِي الرِّضَا وَالْغَضَبِ، وَأَسْأَلُكَ الْقَصْدَ فِي الْفَقْرِ وَالْغِنٰى، وَأَسْأَلُكَ نَعِيْمًا لَا يَنْفَدُ، وَأَسْأَلُكَ قُرَّةَ عَيْنٍ لَا تَنْقَطِعُ، وَأَسْأَلُكَ الرِّضَاءَ بَعْدَ الْقَضَاءِ، وَأَسْأَلُكَ بَرْدَ الْعَيْشِ بَعْدَ الْمَوْتِ، وَأَسْأَلُكَ لَذَّةَ النَّظَرِ إِلٰى وَجْهِكَ وَالشَّوْقَ إِلٰى لِقَائِكَ فِيْ غَيْرِ ضَرَّاءَ مُضِرَّةٍ وَلَا فِتْنَةٍ مُضِلَّةٍ، اَللّٰهُمَّ زَيِّنَّا بِزِيْنَةِ الْإِيْمَانِ وَاجْعَلْنَا هُدَاةً مُهْتَدِيْنَ

100. அல்லாஹ்வே! நீ மறைவான அனைத்தையும் அறிந்திருக்கிறாய். படைப்பினங்கள் அனைத்தின் மீதும் ஆற்றல் பெற்றிருக்கிறாய். ஆகவே,

வாழ்க்கை எனக்கு சிறப்பாக அமையும் என்று நீ அறிந்திருக்கும் வரை என்னை உயிர் வாழச் செய்! மரணம் எனக்கு நன்மை என்று நீ அறிந்திருந்தால் எனக்கு மரணத்தைத் தா! அல்லாஹ்வே... தனிமையிலும் வெளிப்படையிலும் உனது அச்சத்தை நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். மகிழ்ச்சியிலும் கோபத்திலும் உண்மையை உரைப்பதை உன்னிடம் கேட்கிறேன். செல்வத்திலும் வறுமையிலும் நடுநிலையுடன் நடந்து கொள்வதை உன்னிடம் கேட்கிறேன். முடிந்துவிடாத அருட்கொடையை உன்னிடம் கேட்கிறேன். நீங்கி விடாத கண் குளிர்ச்சியை உன்னிடம் கேட்கிறேன். உனது விதிக்குப் பின் பொருத்தத்தை உன்னிடம் கேட்கிறேன். மரணத்திற்குப் பின் மகிழ்ச்சியான வாழ்க்கையை உன்னிடம் கேட்கிறேன். உனது முகத்தைப் பார்க்கும் இன்பத்தை உன்னிடம் கேட்கிறேன். உன்னைச் சந்திக்கும் ஆசையை உன்னிடம்

கேட்கிறேன். இவை அனைத்தையும் இடையூறு தரும் சிரமமின்றி, வழிகெடுக்கும் குழப்பமின்றி எனக்கு வழங்கியருள்! அல்லாஹ்வே! ஈமானின் அலங்காரத்தால் எங்களை அலங்கரித்து விடு! நேர்வழி காட்டுபவர்களாகவும் நேர்வழி பெற்றவர்களாகவும் எங்களை ஆக்கியருள்! (ஸுனன் நஸாயி)

اَللّٰهُمَّ ارْزُقْنِيْ حُبَّكَ وَحُبَّ مَنْ يَنْفَعُنِيْ حُبُّهُ عِنْدَكَ. اَللّٰهُمَّ مَا رَزَقْتَنِيْ مِمَّا أُحِبُّ فَاجْعَلْهُ قُوَّةً لِّيْ فِيْمَا تُحِبُّ، اَللّٰهُمَّ وَمَا زَوَيْتَ عَنِّيْ مِمَّا أُحِبُّ فَاجْعَلْهُ فَرَاغًا لِيْ فِيْمَا تُحِبُّ

101. அல்லாஹ்வே! உன்னுடைய அன்பையும் யாருடைய அன்பு உன்னிடம் எனக்குப் பலன் தருமோ அவருடைய அன்பையும் நீ எனக்கு வழங்கு! அல்லாஹ்வே! நான் விரும்பியவற்றில்

இருந்து நீ எனக்கு வழங்கியதை நீ விரும்புவதைச் செய்வதற்கு எனக்கு ஆற்றலாக ஆக்கி வை! அல்லாஹ்வே! நான் விரும்பியவற்றிலிருந்து எனக்கு நீ கொடுக்காததை நீ விரும்பியவற்றை நான் செய்வதற்கு வாய்ப்பாக ஆக்கி வை!

(ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ طَهِّرْنِيْ مِنَ الذُّنُوْبِ وَالْخَطَايَا. اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنْهَا كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ، اَللّٰهُمَّ طَهِّرْنِيْ بِالثَّلْجِ وَالْبَرَدِ وَالْمَاءِ الْبَارِدِ

102. அல்லாஹ்வே! பாவங்களை விட்டும், குற்றங்களை விட்டும் என்னை நீ தூய்மைப்படுத்து! அல்லாஹ்வே! வெண்மையான ஆடை அழுக்கை விட்டு தூய்மையாக்கப்படுவதுபோல் அவற்றைவிட்டு என்னை நீ தூய்மைப்படுத்து! அல்லாஹ்வே! பனிக்கட்டியைக் கொண்டும்


DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com

ஆலங்கட்டியைக் கொண்டும் குளிர்ந்த நீரைக் கொண்டும் என்னை நீ தூய்மைப்படுத்து!

(ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْبُخْلِ وَالْجُبْنِ وَسُوْءِ الْعُمْرِ وَفِتْنَةِ الصَّدْرِ وَعَذَابِ الْقَبْرِ

103. அல்லாஹ்வே! கஞ்சத்தனம், கோழைத்தனம், தீய வாழ்க்கை, இதயத்தின் குழப்பம், கப்ரின் வேதனை ஆகிய அனைத்தையும் விட்டு நிச்சயமாக உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

(ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ رَبَّ جِبْرَائِيْلَ وَمِيْكَائِيْلَ وَرَبَّ إِسْرَافِيْلَ أَعُوْذُ بِكَ مِنْ حَرِّ النَّارِ وَمِنْ عَذَابِ الْقَبْرِ

104. அல்லாஹ்வே! ஜிப்ரயீல் மற்றும் மீக்காயீல் உடைய இறைவனே! இஸ்ராஃபீலுடைய

இறைவனே! நரகத்தின் உஷ்ணத்தை விட்டும், கப்ரின் வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ أَلْهِمْنِيْ رُشْدِيْ وَأَعِذْنِيْ مِنْ شَرِّ نَفْسِيْ

105. அல்லாஹ்வே! எனக்கு நல்வழியை (என் உள்ளத்தில்) உதிக்க வை! என் ஆத்மாவின் தீங்கை விட்டு என்னைப் பாதுகாத்துக் கொள்! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ عِلْمًا نَافِعًا،
وَأَعُوْذُ بِكَ مِنْ عِلْمٍ لَا يَنْفَعُ

106. அல்லாஹ்வே! நிச்சயமாக நான் பலன் தரும் கல்வியை உன்னிடம் கேட்கிறேன். பலன் தராத கல்வியை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். (ஸுனன் இப்னு மாஜா)

اَللّٰهُمَّ رَبَّ السَّمَاوَاتِ وَرَبَّ الْأَرْضِ وَرَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ رَبَّنَا وَرَبَّ كُلِّ شَيْءٍ فَالِقَ الْحَبِّ وَالنَّوٰى وَمُنْزِلَ التَّوْرَاةِ وَالْإِنْجِيْلِ وَالْفُرْقَانِ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ كُلِّ شَيْءٍ أَنْتَ آخِذٌ بِنَاصِيَتِهِ، اَللّٰهُمَّ أَنْتَ الْأَوَّلُ فَلَيْسَ قَبْلَكَ شَيْءٌ وَأَنْتَ الْآخِرُ فَلَيْسَ بَعْدَكَ شَيْءٌ وَأَنْتَ الظَّاهِرُ فَلَيْسَ فَوْقَكَ شَيْءٌ وَأَنْتَ الْبَاطِنُ فَلَيْسَ دُوْنَكَ شَيْءٌ اِقْضِ عَنَّا الدَّيْنَ وَأَغْنِنَا مِنَ الْفَقْرِ

107. அல்லாஹ்வே! (ஏழு) வானங்களின் இறைவனே! பூமியின் இறைவனே! மகத்தான அர்ஷின் இறைவனே! எங்கள் இறைவனே! அனைத்துப் பொருட்களின் இறைவனே!

விதைகளையும் வித்துக்களையும் உடைப்பவனே! தவ்ராத், இன்ஜீல், ஃபுர்கானை இறக்கியவனே! உச்சி முடியை நீ பிடித்திருக்கும் அனைத்துப் பொருட்களின் தீங்கை விட்டும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வே! நீயே முந்தியவன்; உனக்கு முன் எதுவும் இல்லை. நீயே இறுதியானவன் உனக்கு பின் எதுவுமில்லை. நீயே (அனைத்திற்கும்) மேலானவன்; உனக்கு மேல் எதுவும் இல்லை. நீ மறைவானவன்; உனக்கு மறைந்தது எதுவும் இல்லை. எங்களை விட்டும் கடனை அடைத்து விடு; ஏழ்மையை விட்டும் எங்களை (தூரமாக்கி) செல்வத்தை வழங்கு!

(ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ أَلِّفْ بَيْنَ قُلُوْبِنَا وَأَصْلِحْ ذَاتَ بَيْنِنَا وَاهْدِنَا سُبُلَ السَّلَامِ وَنَجِّنَا مِنَ الظُّلُمَاتِ إِلَى النُّوْرِ وَجَنِّبْنَا الْفَوَاحِشَ مَا ظَهَرَ مِنْهَا وَمَا

بَطَنَ وَبَارِكْ لَنَا فِيْ أَسْمَاعِنَا وَأَبْصَارِنَا وَقُلُوْبِنَا وَأَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا وَتُبْ عَلَيْنَا إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الرَّحِيْمُ. وَاجْعَلْنَا شَاكِرِيْنَ لِنِعَمِكَ مُثْنِيْنَ بِهَا عَلَيْكَ قَابِلِيْنَ لَـهَا وَأَتْمِمْهَا عَلَيْنَا

108. அல்லாஹ்வே! எங்கள் உள்ளங்களுக்கு இடையில் அன்பை ஏற்படுத்து. எங்களுக்கு இடையில் சீர்திருத்தம் செய். ஈடேற்றத்தின் பாதைகளுக்கு எங்களுக்கு வழிகாட்டு! இருள்களை விட்டும் வெளிச்சத்தின் பக்கம் எங்களைப் பாதுகாத்துச் சேர்த்து வை! வெளிப்படையான மறைவான எல்லா மானக்கேடான விஷயங்களை விட்டும் எங்களைத் தூரமாக்கு! எங்களது செவிகளில், எங்கள் பார்வைகளில், எங்கள் உள்ளங்களில், எங்கள் மனைவியர்களில், எங்களது சந்ததிகளில் எங்களுக்கு மிக பரக்கத்

செய்! எங்களது பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்! நிச்சயமாக நீயே பிழை பொறுப்பை ஏற்றுக் கொள்பவன்! நிகரற்ற அன்புடையவன். உனது அருட்கொடைக்கு நன்றி செலுத்துபவர்களாக, அவற்றைக் கொண்டு உன்னைப் புகழ்ந்தவர்களாக, அவற்றை ஏற்றுக் கொண்டவர்களாக எங்களை ஆக்கி வை! அவற்றை எங்களுக்கு முழுமையாக்கி வை! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ خَيْرَ الْمَسْأَلَةِ وَخَيْرَ الدُّعَاءِ وَخَيْرَ النَّجَاحِ وَخَيْرَ الْعَمَلِ وَخَيْرَ الثَّوَابِ وَخَيْرَ الْحَيَاةِ وَخَيْرَ الْمَمَاتِ، وَثَبِّتْنِيْ وَثَقِّلْ مَوَازِيْنِيْ وَحَقِّقْ إِيْمَانِيْ وَارْفَعْ دَرَجَاتِيْ وَتَقَبَّلْ صَلَاتِيْ وَاغْفِرْ خَطِيْئَتِيْ، وَأَسْأَلُكَ الدَّرَجَاتِ الْعُلٰى مِنَ

الْجَنَّةِ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ فَوَاتِحَ الْخَيْرِ وَخَوَاتِمَهُ

وَجَوَامِعَهُ وَأَوَّلَهُ وَظَاهِرَهُ وَبَاطِنَهُ وَالدَّرَجَاتِ

الْعُلٰى مِنَ الْجَنَّةِ آمِيْنْ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ خَيْرَ

مَا آتِيْ وَخَيْرَ مَا أَفْعَلُ وَخَيْرَمَا أَعْمَلُ وَخَيْرَمَا

بَطَنَ وَخَيْرَمَا ظَهَرَ وَالدَّرَجَاتِ الْعُلٰى مِنَ الْجَنَّةِ

آمِيْنْ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ أَنْ تَرْفَعَ ذِكْرِيْ وَتَضَعَ

وِزْرِيْ وَتُصْلِحَ أَمْرِيْ وَتُطَهِّرَ قَلْبِيْ وَتُحَصِّنَ

فَرْجِيْ وَتُنَوِّرَ لِيْ قَلْبِيْ وَتَغْفِرَلِيْ ذَنْبِيْ، وَأَسْأَلُكَ

الدَّرَجَاتِ الْعُلٰى مِنَ الْجَنَّةِ آمِيْنْ، اَللّٰهُمَّ إِنِيْ

أَسْأَلُكَ أَنْ تُبَارِكَ لِيْ فِيْ نَفْسِيْ وَفِيْ سَمْعِيْ وَفِيْ

بَصَرِيْ وَفِيْ رُوْحِيْ وَفِيْ خَلْقِيْ وَفِيْ خُلُقِيْ وَفِيْ أَهْلِيْ وَفِيْ مَحْيَايَ وَفِيْ مَمَاتِيْ وَفِيْ عَمَلِيْ فَتَقَبَّلْ حَسَنَاتِيْ وَأَسْأَلُكَ الدَّرَجَاتِ الْعُلٰى مِنَ الْجَنَّةِ آمِيْنْ.

109. அல்லாஹ்வே! சிறந்த யாசகத்தை, சிறந்த பிரார்த்தனையை, சிறந்த வெற்றியை, சிறந்த அமலை, சிறந்த நன்மையை, சிறந்த வாழ்க்கையை, சிறந்த மரணத்தை நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். என்னை உறுதிப்படுத்து! எனது தராசுகளைக் கனக்க வை! எனது ஈமானை உண்மையாக்கி வை! எனது அந்தஸ்துகளை உயர்த்து! என் தொழுகையை ஏற்றுக்கொள்! என் குற்றத்தை மன்னித்து விடு! சொர்க்கத்தில் மிக உயர்ந்த அந்தஸ்துகளை உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வே! நன்மையின் தொடக்கங்களையும் அதன் முடிவுகளையும் அதன் அனைத்து வகைகளையும் அதில் முந்தியதையும் அதில்


DARUL HUDA , CHENNAI - 1 | muftiomar@gmail.com

வெளிப்படையானதையும் அதில் மறைவானதையும் சொர்க்கத்தின் உயர்ந்த அந்தஸ்துகளையும் உன்னிடம் கேட்கிறேன். ஆமீன்! அல்லாஹ்வே! நான் எதைச் செய்ய செல்கிறேனோ அதன் நன்மையையும் எதைச் செய்கிறேனோ அதன் நன்மையையும் மறைந்திருப்பவற்றின் நன்மையையும் வெளிப்படையாக தெரிபவற்றின் நன்மையையும் சொர்க்கத்தில் உயர்ந்த பதவிகளையும் உன்னிடம் கேட்கிறேன். ஆமீன். அல்லாஹ்வே! எனது (சிறப்பை) நற்பெயரை உயர்வடையச் செய்! எனது பாவத்தை அகற்றிவிடு! எனது காரியத்தை சீர்படுத்தி விடு! எனது உள்ளத்தைத் தூய்மைப்படுத்து! எனது கற்பைப் பாதுகாத்துக் கொள்! என் உள்ளத்தை எனக்கு ஒளிமயமாக்கு! என் குற்றத்தை எனக்கு மன்னித்து விடு! சொர்க்கத்தில் உயர்ந்த பதவிகளை உன்னிடம் கேட்கிறேன். ஆமீன்.

அல்லாஹ்வே! எனக்கு எனது ஆத்மாவில், எனது செவியில், எனது பார்வையில், எனது உயிரில், எனது படைப்பில், எனது குணத்தில், எனது குடும்பத்தில், எனது வாழ்க்கையில், எனது மரணத்தில், எனது செயலில் நீ பரக்கத் செய்யவேண்டுமென உன்னிடம் கேட்கிறேன். எனது நன்மைகளை அங்கீகரித்துக் கொள்! சொர்க்கத்தில் உயர்ந்த பதவிகளை உன்னிடம் கேட்கிறேன். ஆமீன்! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ جَنِّبْنِيْ مُنْكَرَاتِ الْأَخْلَاقِ وَالْأَهْوَاءِ
وَالْأَعْمَالِ وَالْأَدْوَاءِ

110. அல்லாஹ்வே! கெட்ட குணங்கள், கெட்ட ஆசைகள், கெட்ட செயல்கள், கடும் நோய்கள் ஆகிய அனைத்தையும் விட்டு என்னைத் தூரமாக்கி வை! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ قَنِّعْنِيْ بِمَا رَزَقْتَنِيْ وَبَارِكْ لِيْ فِيْهِ وَاخْلُفْ عَلٰى كُلِّ غَائِبَةٍ لِيْ بِخَيْرٍ

111. அல்லாஹ்வே! நீ எனக்குக் கொடுத்ததைக் கொண்டு என்னைத் திருப்தியுறச் செய்! அதில் எனக்கு நீ பரக்கத் செய்! என்னுடைய உடைமைகளில் எது என்னிடமிருந்து தவறி விட்டதோ அதற்குப் பகரமாக எனக்குச் சிறந்ததை வழங்கு! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ حَاسِبْنِيْ حِسَابًا يَّسِيْرًا

112. அல்லாஹ்வே! என்னிடம் மிக இலகுவாக கேள்வி கேட்பாயாக! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ أَعِنَّا عَلٰى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

113. அல்லாஹ்வே! உன்னை நினைவு கூர்வதற்கும் உனக்கு நன்றி செலுத்துவதற்கும் உன்னை

அழகிய முறையில் வணங்குவதற்கும் எங்களுக்கு நீ உதவி செய்! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ إِيْمَانًا لَا يَرْتَدُّ وَنَعِيْمًا لَا يَنْفَدُ وَمُرَافَقَةَ النَّبِيِّ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ فِيْ أَعْلٰى جَنَّةِ الْخُلْدِ

114. அல்லாஹ்வே! தடுமாறாத நம்பிக்கையையும், தீர்ந்துவிடாத அருட்கொடையையும், ‘குல்த்’ என்ற உயர்ந்த சொர்க்கத்தில் முஹம்மது (ஸல்) அவர்களுடன் தோழமை கொள்வதையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். (ஸஹீஹ் இப்னு ஹிப்பான்)

اَللّٰهُمَّ قِنِيْ شَرَّ نَفْسِيْ وَاعْزِمْ لِيْ عَلٰى أَرْشَدِ أَمْرِيْ، اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ مَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ

وَمَا أَخْطَأْتُ وَمَا عَمَدْتُ وَمَا عَلِمْتُ وَمَا جَهِلْتُ

115. அல்லாஹ்வே! எனது நஃப்ஸின் தீங்கை விட்டும் என்னைப் பாதுகாத்துக் கொள்! எனது காரியத்தில் மிகச் சரியானதை எனக்கு உறுதிப்படுத்தித் தா! அல்லாஹ்வே! நான் ரகசியமாகச் செய்ததையும், வெளிப்படையாகச் செய்ததையும், நான் தவறுதலாகச் செய்ததையும், வேண்டுமென்றே செய்ததையும், அறிந்து செய்ததையும், அறியாமல் செய்ததையும் எனக்கு மன்னித்தருள்! (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ غَلَبَةِ الدَّيْنِ
وَغَلَبَةِ الْعَدُوِّ وَشَمَاتَةِ الْأَعْدَاءِ

116. அல்லாஹ்வே! கடன் மிகைப்பதை விட்டும், எதிரிகள் மிகைப்பதை விட்டும், எதிரிகள் நகைப்பதை விட்டும் நிச்சயமாக நான் உன்னிடம்

பாதுகாவல் தேடுகிறேன். (ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ وَاهْدِنِيْ وَارْزُقْنِيْ وَعَافِنِيْ وَأَعُوْذُ بِاللّٰهِ مِنْ ضِيْقِ الْمَقَامِ يَوْمَ الْقِيَامَةِ

117. அல்லாஹ்வே... எனக்கு மன்னிப்பு வழங்கு! எனக்கு நேர்வழி காட்டு! எனக்கு உணவளி! எனக்கு பூரண சுகத்தைத் தா! மறுமை நாளில் நெருக்கடியான நிலைமையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறேன். (ஸுனனுன் நஸாயி)

اَللّٰهُمَّ مَتِّعْنِيْ بِسَمْعِيْ وَبَصَرِيْ، وَاجْعَلْهُمَا الْوَارِثَ مِنِّيْ. وَانْصُرْنِيْ عَلٰى مَنْ يَظْلِمُنِيْ، وَخُذْ مِنْهُ بِثَأْرِيْ

118. அல்லாஹ்வே... எனது செவியில், எனது பார்வையில், எனக்கு சுகத்தைத் தா! அவ்விரண்டுக்கும் எனக்கு வாரிசை ஏற்படுத்து!

எனக்கு அநீதி இழைப்பவருக்கு எதிராக எனக்கு உதவி செய்! எனக்காக நீ அவரிடம் பழிவாங்கு! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ عِيْشَةً نَقِيَّةً وَمِيْتَةً سَوِيَّةً

وَمَرَدًّا غَيْرَ مُخْزٍ وَلَا فَاضِحٍ

119. அல்லாஹ்வே! தூய்மையான வாழ்க்கையையும் நேரான மரணத்தையும் கேவலமற்ற, பழிப்பற்ற மீண்டு செல்லும் இடத்தையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். (மஜ்மவுஸ் ஸவாயிது)

اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ كُلُّهُ، اَللّٰهُمَّ لَا قَابِضَ لِمَا بَسَطْتَ

وَلَا بَاسِطَ لِمَا قَبَضْتَ وَلَا هَادِيَ لِمَا أَضْلَلْتَ

وَلَا مُضِلَّ لِمَنْ هَدَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ

وَلَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا مُقَرِّبَ لِمَا بَاعَدْتَ

وَلَا مُبَاعِدَ لِمَا قَرَّبْتَ، اَللّٰهُمَّ ابْسُطْ عَلَيْنَا مِنْ
بَرَكَاتِكَ وَرَحْمَتِكَ وَفَضْلِكَ وَرِزْقِكَ، اَللّٰهُمَّ إِنِّيْ
أَسْأَلُكَ النَّعِيْمَ الْمُقِيْمَ الَّذِيْ لَا يَحُوْلُ وَلَا يَزُوْلُ،
اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ النَّعِيْمَ يَوْمَ الْعَيْلَةِ وَالْأَمْنَ يَوْمَ
الْخَوْفِ، اَللّٰهُمَّ إِنِّيْ عَائِذٌ بِكَ مِنْ شَرِّ مَا أَعْطَيْتَنَا
وَشَرِّ مَا مَنَعْتَنَا، اَللّٰهُمَّ حَبِّبْ إِلَيْنَا الْإِيْمَانَ وَزَيِّنْهُ
فِيْ قُلُوْبِنَا وَكَرِّهْ إِلَيْنَا الْكُفْرَ وَالْفُسُوْقَ وَالْعِصْيَانَ
وَاجْعَلْنَا مِنَ الرَّاشِدِيْنَ، اَللّٰهُمَّ تَوَفَّنَا مُسْلِمِيْنَ
وَأَحْيِنَا مُسْلِمِيْنَ وَأَلْحِقْنَا بِالصَّالِحِيْنَ غَيْرَ خَزَايَا
وَلَا مَفْتُوْنِيْنَ، اَللّٰهُمَّ قَاتِلِ الْكَفَرَةَ الَّذِيْنَ يُكَذِّبُوْنَ

رُسُلَكَ وَيَصُدُّوْنَ عَنْ سَبِيْلِكَ وَاجْعَلْ عَلَيْهِمْ رِجْزَكَ وَعَذَابَكَ، اَللّٰهُمَّ قَاتِلِ الْكَفَرَةَ الَّذِيْنَ أُوْتُوا الْكِتَابَ إِلٰهَ الْحَقِّ (آميْن)

120. அல்லாஹ்வே! உனக்கே எல்லாப் புகழும் உரியது. அல்லாஹ்வே! நீ விரித்ததை யாராலும் மடக்க முடியாது. நீ மடக்கியதை யாராலும் விரிக்க முடியாது. நீ வழிகெடுத்தவரை நேர்வழி காட்டுபவர் யாருமில்லை. நீ நேர்வழி காட்டியவரை வழிகெடுப்பவர் யாருமில்லை; நீ தடுத்ததை கொடுப்பவர் யாருமில்லை. நீ தூரமாக்கியதை சமீபமாக்குபவர் யாருமில்லை. நீ சமீபமாக்கியதைத் தூரமாக்குபவர் யாருமில்லை. அல்லாஹ்வே! உன்னுடைய பரக்கத்துகள், உன்னுடைய கருணை, உன்னுடைய கிருபை, உன்னுடைய வாழ்க்கை வசதிகள் அனைத்தையும் எங்களுக்கு வாரி வழங்கு! அல்லாஹ்வே! நீங்காத, அழியாத,

நிரந்தரமான அருட்கொடையை நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வே! மறுமை நாளில் அருட்கொடைகளையும், அச்ச நாளில் பாதுகாப்பையும் நிச்சயமாக நான் உன்னிடம் கேட்கிறேன். அல்லாஹ்வே! நீ எங்களுக்குக் கொடுத்ததின் தீங்கை விட்டும் எங்களுக்குக் கொடுக்காததின் தீமையை விட்டும் உன்னிடம் நிச்சயமாக நான் பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வே! எங்களுக்கு ஈமானை நேசமாக்கி வை! அதை எங்களுடைய உள்ளங்களிலே அலங்கரித்து வை! நிராகரிப்பையும் உனது கட்டளைகளை மீறுவதையும் பாவங்கள் செய்வதையும் எங்களுக்கு வெறுப்பாக்கி வை! எங்களை நேர்வழி பெற்றவர்களில் ஆக்கி வை! அல்லாஹ்வே! எங்களை முஸ்லிம்களாக மரணிக்க வை! முஸ்லிம்களாக எங்களை மீண்டும் எழுப்பு! இழிவின்றி, குழப்பமின்றி எங்களைப் பாதுகாத்து நல்லோர்களுடன் எங்களைச்

சேர்த்து வை! அல்லாஹ்வே! உனது தூதரைப் பொய்ப்பிக்கும் உன் வழியை விட்டும் (மக்களைத்) தடுக்கும் காஃபிர்களைக் கொன்றுவிடு! உனது தண்டனையையும் வேதனையையும் அவர்கள் மீது இறக்கி விடு! அல்லாஹ்வே! கிதாப் கொடுக்கப்பட்ட காஃபிர்களைக் கொன்றுவிடு! உண்மையான இறைவனே... ஆமீன்!

(அல்அதபுல் முஃப்ரத்)

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ وَارْحَمْنِيْ وَاهْدِنِيْ وَاجْبُرْنِيْ وَعَافِنِيْ وَارْزُقْنِيْ وَارْفَعْنِيْ

121. அல்லாஹ்வே... எனக்கு மன்னிப்பு வழங்கு! எனக்கு கருணை காட்டு! எனக்கு நேர்வழி காட்டு! ஆறுதல் தா! எனக்கு முழுமையான சுகத்தைத் தா! எனக்கு உணவளி! எனக்கு உயர்வைக் கொடு. (ஜாமிவுத் திர்மிதி, ஸஹீஹ் முஸ்லிம்)

اَللّٰهُمَّ زِدْنَا وَلَا تَنْقُصْنَا وَأَكْرِمْنَا وَلَا تُهِنَّا وَأَعْطِنَا وَلَاتَحْرِمْنَا وَآثِرْنَا وَلَاتُؤْثِرْ عَلَيْنَا وَأَرْضِنَا وَارْضَ عَنَّا

122. அல்லாஹ்வே! எங்களுக்கு (உன் அருட்கொடைகளை) அதிகப்படுத்து! எங்களுக்குக் குறைத்து விடாதே! எங்களைக் கண்ணியப்படுத்து! எங்களை இழிவுபடுத்தி விடாதே! (உன் அருட்கொடைகளை) எங்களுக்கு கொடு! எங்களை இழக்க வைத்து விடாதே! எங்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்! எங்களை விட்டுவிடாதே! எங்களைத் திருப்தி கொள்ளச் செய்! நீயும் எங்களைக் கொண்டு திருப்திகொள்! (ஜாமிவுத் திர்மிதி)

اَللّٰهُمَّ أَحْسَنْتَ خَلْقِيْ فَـأَحْسِنْ خُلُقِيْ

123. அல்லாஹ்வே! எனது உருவத்தை

அழகுபடுத்தினாய்; எனது குணத்தையும் அழகுபடுத்து! (முஸ்னது அஹ்மது)

اَللّٰهُمَّ ثَبِّتْنِيْ وَاجْعَلْنِيْ هَادِيًا مَهْدِيًّا

124. அல்லாஹ்வே! என்னை உறுதிப்படுத்து; நேர்வழி காட்டுபவனாகவும், நேர்வழி பெற்றவனாகவும் என்னை ஆக்கி வை!

(ஸஹீஹுல் புகாரி)

اللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى آلِ مُحَمَّدٍ وَأَصْحَابِهِ أَجْمَعِيْنَ

அல்லாஹ்வே! எங்களது நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் அவர்களை மனத்தூய்மையுடன் பின்பற்றும் மக்களின் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் பொழி!

-------------